வெளியீடு நே. 19.

# வால்டையரின் சரிதம்.

# LIFE OF VOLTAIRE.

ஆக்கியோன்:

ராபர்ட்டு இங்கர்சால்.

மொழிபெயர்த்தோர் தோழர்,

K. M. பாலசுப்பிரமணியம், B. A., B. L.,

அட்வொகேட், மதராஸ்.

வெளியிடுவோர்,

பகுத்தறிவு நூற்பதிப்புக்கழகம் லிமிட்டெட்,

ஈரோடு.

விலை] 1935. [அணா 4.

# வால்டையரின் சரிதம்.

# LIFE OF VOLTAIRE

———)o(———

ஆக்கியோர்

ராபர்ட்டு இங்கர்சால்.

மொழி பெயர்த்தோர் தோழர்,

**K. M. பால சுப்பிரமணியம், B. A., B. L.,**

அட்வொகேட், மதராஸ்.

வெளியிடுவோர்,

**பகுத்தறிவு நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,**

**ஈரோடு.**

விலை] **1935.** [அணா 4.

# முன்னுரை.

---

இந்த வால்டையர் சரித்திரமானது பிரபல பகுத்தறிவு வாதியாகிய தோழர், ராபர்ட் இங்கர்சால் அவர்களால் எடுத்துக் கூறியதை அனுசரித்து சுயமரியாதை இயக்கத் தோழரும், அறிஞருமாகிய தோழர் K. M. பால சுப்பிரமணியம், B. A , B. L., அட்வொகேட், அவர்களால் அழகிய தமிழ் நடையில் மொழி பெயர்க்கப்பட்டதாகும்.

வால்டையர் அவர்கள் சரித்திரத்தை படித்துப்பார்த்தால் அதில் வால்டையர் ஒரு நாஸ்த்திகர் என்னும் காரணத்திற்காக அவர் எவ்வளவு கஷ்டத்துக்குள்ளாக்கப் பட்டார் என்பதும், நாஸ்திகர்கள் இடத்தில் எவ்வளவு அன்பு, பரோபகாரம், வீரம், உண்மை ஆகிய குணங்கள் மலிந்து கிடந்தன என்பதும், மத பக்தர்கள் இடத்தில் எவ்வளவு கொடுமை, துவேசம், அக்கிரமம் ஆகியவை நிறைந்து கிடந்தன என்பதும் விளங்கும்.

அன்றியும் இன்றும் உலகில் எவரிடம் அன்பு, நீதி, பரோபகாரம் ஆகிய குணங்கள் உண்மையாகக் காணப்பட்டிருந்தாலும், காணப்படுவதாயிருந்தாலும் அவை பெரிதும் வால்டையர் போன்ற நாஸ்திகர்கள் உலகாயித மதக்காரர்கள் என்பவர்களிடத்திலேயே விளங்குகின்றதே அல்லாமல் மதாச்சாரிகள், மதப் பிரசாரகர்கள், மதத் தலைவர்கள் ஆகியவர்களிடத்தில் அருமையிலும் அருமையாக இருப்பதைக் காணலாம்.

இவ்விஷயங்கள் மக்களுக்கு விளங்கவேண்டும் என்கின்ற எண்ணத்துடனேயே வால்டையர் சரித்திரத்தை மொழி பெயர்த்து தமிழ் மக்களுக்கு உதவியதற்கு தோழர் பால சுப்பிரமணியம் அவர்களுக்கும், பகுத்தறிவு நூற்பதிப்புக் கழகத்தாருக்கும் மனித சமூக உலகம் நன்றி பாராட்டக் கடமைப் பட்டிருக்கிறது என்பது எனது அபிப்பிராயம்.

ஈ. வெ. ராமசாமி.

———)o(———

# LIFE OF VOLTAIRE:

# வால்டையரின் வாழ்க்கைச் சரிதம்.

——)o(——

## முதலாவது அத்தியாயம்.

ஓர் காலத்தில் நாத்திகர் என நகைக்கப்படுவோர் மற்றொரு காலத்தில் "நாயன்மார்" என நத்தப்படுவர். பழையனவற்றைப்பாழாக்குவோர் புதியனவற்றைப் புதுப்பிப்போர் ஆவர். காலச் சக்கரம் கரகரவெனச் சுழல, காலச்சீக்கிரம் பழயன கழிந்து சடுதியில் புதியன தாமும் பழையனவாகும். பூதவுலகத்தைப் போன்றே அறிவு உலகத்திலும் இறத்தலும், பிறத்தலும் எந்நாளுமுண்டு. நாத்திகர் என்பாரின் வாழ்க்கைச் சரிதமே அறிவு வளர்ச்சியின் அருஞ் சரிதமாகும். அரசியல் உரிமைகள் அனைத்தும் "அரச துரோகர்" எனப்படுவோராலே பாதுகாக்கப்பட்டு வருகின்றன. மனத்தின் சுதந்திரம் என்றும் "மதத்துவேஷி" என்போராலேயே வளர்க்கப்பட்டு வருகின்றன. மன்னர்தமை எதிர்ப்பின் ராஜ துரோகி; மதங்களைத் தாக்கின் மதத்துவேஷி என்பர். நீண்ட காலமாக மதங்களும் மன்னரும் நெருங்கிய தோழர்களாயிருந்தனர். இருவரும் சேர்ந்து மாந்தரைத் தாக்குவதும், தாம் தாக்கப்படின் இருவரும் சேர்ந்துபோரிடுவதும், சகஜம். அரியாசனமும், இறைவன் கோவிலும் அண்ணன் தம்பி போன்றிருந்தன. அவை இரண்டும் ஒரே முட்டையிற் பிறந்த இரு கழுகுகள். முதலாவது

ஜேம்ஸ் என்னும் ஓர் ஆங்கில அரசன் "அர்ச்சகன் இல்லையேல், அரசனும் இல்லை" என்று கூறியுள்ளான். ஆனால் "மதம் இல்லையேல், மன்னனும் இல்லை" என்று அவன் கூறியிருப்பினும் ஒக்கும். மக்களது உடல் மன்னனுக்கு உரித்தாகின், மக்கள் தம் உள்ளம் குருக்கள் மார்க்கடிமை.

வன்மையாற் பறித்தவரிகளால் அரசன் வாழின், பயத்தால் ஈந்த பிச்சையால் குருக்கள் கொழுக்கின்றனர். இருவரும் கொள்ளைக்காரர்களே, இருவரும் பிச்சைக்காரர்களே.

இத்தகைய கொள்ளைக்காரர்களும், பிச்சைக்காரர்களும் தனித்தனியாக இரண்டு உலகங்களை ஆண்டு வந்தனர். அரசன் சட்டத்தை ஆற்றினான்; அர்ச்சகன் சமயத்தைப் படைத்தான். இருவரும் 'கடவு'ளின் ஏஜண்டுகளாக நின்று ஏகாதிபத்தியம் செய்து வந்தனர். மன்னன் காலால் இட்ட கட்டளையை மக்கள் தலையால் செய்தனர், மதத்தினர் விதித்த கொள்கைகளை இறும்பூதுடனே ஏற்று நின்றனர். சுதந்திரத்திற்கு மனிதர் ஆசைப்படின் அரசன் அவர்களைத் தொலைத்துவிடுவான்; மக்கள் அறிவின் உண்மைகளை மத மிகு குருக்கள் சிதைத்து விடுவார். பலாத்காரத்தால் மன்னனும், பயத்தினால் குருமாரும் மக்களை அடக்கி ஆண்டுவந்தனர்.

மன்னன் மக்களுக்கு மொழிவது, "உங்களை ஏழைகளாகவும், என்னை மன்னனாகவும் 'கடவுள்' பார்த்தார். உங்களை உழைக்கும்படியும் என்னை உண்டு கொழுக்கும்படியும் ஆக்ஞாபித்தார். கந்தையையும், பொந்துகளையும்

உமக்கும், காண்பரிய அரண்மனையை எனக்கும் கொடுத்துள்ளார். நான் பணிக்கவும் நீங்கள் பணியவும் செய்துள்ளார் பரமசிவன். நீதி நிறைந்த பரங்கருணையின் நியாயம் அது''

மதக் குருக்கள் மக்களை நோக்கிக் கூறுவது: ''கடவுள் உம்மை கேவலமாகவும், தற்குறிகளாகவும், எம்மை தூய்மையாகவும், அறிவினராகவும் படைத்துள்ளார். நீங்கள் ஆட்டு மந்தைகள்: நாங்கள் அவைக்குரிய இடையர், உங்கள் ரோமம் எம்முடையது. இவ்வுலகில் நீங்கள் எமக்குக் கீழ்ப்படிய'பாவிடின் இம்மையில் கஷ்டமும், பரத்தில் தொல்லையும் இடைவிடாது வருத்தும். இதுவே கடவுளின் கருணை.''

''ஏதொன்றுக்கும் காரணம் கேளாதே. காரணம் என்பது ஒரு கட்டுக்கடங்காத பகைவன். ஏதொன்றையும் மறுக்காதே: மறுப்பதென்பது மனிதனின் தற்பெருமையின் குழவி. எனவே நீங்கள் எங்கள் வார்த்தைகள் முழுவதையும் நம்பவேண்டும்.

நமது அதிர்ஷ்ட வசத்திற்கேற்ப, உலகத்தில் இதுவரைக்கும், ராஜத்துரோகிகளும், மதத்துரோகிகளும், சிந்தனைக் காரர்களும், ஆராய்ச்சியாளர்களும், சுதந்திர மோஹிகளும், சுத்த அறிவினரும் தோன்றி வந்துள்ளனர். இவர்கள்தான் தம் மனித முன்னேற்றத்திற்காக தம் உயிரையும் தத்தம் செய்துள்ளார்கள்.

'மகான்கள்' அல்லது 'பெரியோர்' என்றால் என்ன? திருவள்ளுவர் கூறியபடி 'செயற்கரிய செய்வார் பெரியர்'

பெரியார் எனப்படுவோர் மக்கள் தம் அறிவைப் பெருக்கியும், யோசனையின் விசாலத்தை அகல்வித்தும், அச்சம் என்னும் சிறையினின்று மக்களின் மனதை விடுவித்தும், சிந்தைக்கெட்டாத யோசனைக் கடலில் சிறந்த ஞானத்தீவுகளைக் கண்டுபிடித்தும், மனதுக்கெட்டாத வானந்தன்னில் புதிய பல் விண் மீன்களைத் தோற்றுவித்தும் நலம் செய்பவர் என்னலாம். உண்மையிற் பெரியவர் என்பவர் மக்கள் தம் போற்றுதலையும், மகிழ்ச்சி தரும் ஸ்தானங்களையும் விரும்பார். எப்போதும் அவர் உண்மையை நாடுவர், இன்பத்தையே தேடுவர். ஆண்டு கிட்டிய இன்பத்தை "யாம் பெற்ற இன்பம், பெறுக இவ் வையகம்" என ஏனைய மக்களுக்கு வரையாது ஈவர். சிற்சில சமயங்களில் பெரியவர் என்பார் தமது உத்தம உண்மைகளாகிய முத்துக்களை மனிதராகிய பன்றிகளிடம் சிதறிவிடுவர். பெரியார் எனப்படுபவர் இருளகத்தொளிரும் எழில் ஒளியாவர், மூட நம்பிக்கை எனும் இரவை முற்றிலும் அகற்றும் குன்றொளியாவர், ஊக்கத்தை ஊட்டும் உத்தமராவர். பெரியாரெனப்படுபவர் மக்களது உடலை விடுவித்த வீரரும், மனதிற்குச் சுதந்தரமளித்த அறிவினரும் வித்தகரும், ஆவர். அவர்கள்தான் அறியாமை, அச்சம் என்னும் அவலக்ஷணமிகுந்த அரக்கர்களை வெட்டி வீழ்த்தி, கொடுந் தேவதைகளைக் கொன்று அரியாசனத்தினின்றும் அகற்றி எறிந்தவர். அவர்களே உலகத்தை நாகரீகப்படுத்தியவர். இத்தகைய பெருமை வாய்ந்த வீரர் படையில், தலைமை தாங்கும் தகைமை வாய்ந்தவர் நாம் இப்போது பேசப்போகும் வால்டையர் என்னும் பெருந்தகை வள்ளல் ஆவர்.

"வால்டையர்'' என்னும் வளமிகும் வார்த்தையைக் கேட்ட உடனே மக்கள் அனைவரும் மகிழ்ச்சியடைவர்; ஆனால் மதக்குருக்களோ மனங்கொதிப்பர். பாதிரி ஒருவர் காதில் இவ்வார்த்தை பட்டவுடனே 'போர் முரசின்' ஒலியைக் கேட்டவராவர். தம் செவிதனில் இப்பேர் சேர்ந்தவுடன் இனியவை மொழியும் அவர்வாய் இன்னாத சொற்களும், இடையறாத வசவும் குற்றால நீர் வீழ்ச்சியெனக் கொட்டா நிற்கும். எனினும் மக்களை விடுவித்த பெரியாருள் வால்டையரே மன்னரென மிளிர்வார்.

கி. பி. 1694-ம் ஆண்டு நவம்பர் மாதம் 21-ந் தேதி ஞாயிறன்று பிரான்ஸ் தேசத்திலே பிறந்தது ஓர் குழவி. பிறந்தவுடனேயே அதன் உயிர்திணரித்திணரித் தடுமாறி இறந்துவிடும்படியான நிலைமையிலிருந்ததால் அதன் பெற்றோர்கள் அதற்கு ஞானஸ்நானம் உடனே செய்வித்தனர். ஏனெனில் அவ்வாறு அவர்கள் அக்குழவிக்கு ஞானஸ்நானம் செய்யாதிருப்பின் அது இறந்தவுடன் நித்திய நரகத்திற்கு ஆளாகியிருந்திருக்குமாம் ஞான நீர் படாத குழந்தைகளைக் கடவுள் வெறுக்கின்றார் என்பது அவர்களுக்குத் தெரியும். 'ஞான' நீரைத் தெளித்து பிரான்காய்மேரி அரூவே (Francois Marie Arouet) என நாமமிட்டு வாழ்த்திய அந்தப் பாதிரி தன் முன்னம் சிறு துணியாற் சுற்றப்பட்டும், சிறிதும் பிழைப்பதற்கிடமின்றிக் கதறிக்கொண்டு கசிந்தழும் மெல்லிய அக்குழவி சிறிது நாளில், மனிதனின் மனதையும், உடலையும் கொன்று தின்ன எத்தனிக்கும் கொடிய மிருகத்தின் கூரல் வளையை நசுக்கிப் பொசுக்கப் போகும் 'நாத்திக வீரர் ஆகும் எனச் சிறிதும் அறிந்திலன்!

வால்டையர் என்பார் இவ்வுலகத்தில் தோன்றுவதற்கு முன் சுமார் ஆயிரத்து நானூறு ஆண்டுகளாக பிரான்ஸ் தேசமானது கிறிஸ்து மதம் பரப்பப்பட்டதாகவிருந்ததே யொழிய நாகரீகம் பரப்பப்பட்ட நாடாகவில்லே. ஓராயிரம் ஆண்டுகட்கு மேல் உண்மையன்பும், அமைதியுமிக்க உன்னதமான கிறிஸ்துவ மதம் தலேயோங்கி யங்கு நின்றிருந்தது. கிறிஸ்துவ மன்னர்களே சட்டத்தை யுண்டாக்கியிருந்தனர். கிறிஸ்துவப் பாதிரிகளே அவைகளே அனுமதித்தும் அங்கீகரித்தும் வந்துள்ளனர்.

பூரண அன்பின் புண்ணிய ஆட்சியில் ஒவ்வொரு நீதி ஸ்தலத்திலும் ஒரு சித்திரவதைக்கூடம் இருந்தது. ஒவ்வொரு பாதிரியும் குட்டை மரத்தையும் கோணியூசியையுங்கொண்டு ஆண்டுவந்தான். அவர் தம் வேதத்தின் விதிக்கு மாறுகச் சென்ற வித்தகம் நிறைந்த விஞ்ஞான நூல்களும் வெந்து சாம்பலாக்கப்பட்டன.

ஒருவன் தன் மனதிற் பட்டதை மறைக்காமல் உரைப்பதும், மற்றைய மாந்தருக்கு மகிழ்ச்சியோடுணர்த்துவதும், உண்மையை நாடி ஆராய்ந்து உணர்வதும் அக்காலத்தில் மாபாதகங்கள் என மதிக்கப்பட்டு வந்தன. தூய்மை மிக்க திருச் சபைகளும் இவற்றை வாளும் தீயுங் கொண்டு வேரற வீழ்த்த முயன்று வந்தன. அன்பின் உருவாகிய கடவுளே அடிபணியும் அடியார்கள் நூற்றுக் கணக்கான குற்றங்களுக்காக மக்களே வாட்டி வதைத்து வீட்டி வீழ்த்தினர். சந்தேகப்பட்டவர்கள் சித்திரவதைக்கஞ்சி குற்றம் செய்ததாக ஒப்புக்கொள்

ளுவார். தண்டிக்கப்பட்டவர் பலாத்காரத்திற்கஞ்சி தம் மோடு சேர்ந்த குற்றவாளிகளைக் காட்டிக் கொடுத்திடு வார். மகா கோவிலின் தலைமையிலே கொடுமை என் பதொன்றே செங்கோலாய் விளங்கியது.

நமது வால்டையர் பிறந்த வருடம் அத்தேசத்து ஆசிரியர்களுட் பலர் சிறைச்சாலையில் சிதைந்து நைந்து வந்தனர். சிலர் ஓட்டாண்டிகளாய் ஒடுக்கப்பட்டுத் திரி ந்தலைந்தனர். மற்றும் சிலர் நாடு கடத்தப்பட்டும், குல முழுதும் நாசமாக்கப்பட்டும் மறைந்தொழிந்தனர். அனை வரும் அரசனின் அடிமைகளாய்த் தவித்தனர்.

தூக்கிலிடும் வேலையற்ற கொலைஞர்கள் தம் நேரத் தைத் தீக்கிரையாக்கிப் பல நூல்களைச் சிதைத்து வந்த னர். நீதி ஸ்தலங்களனைத்தும் நிரபராதிகளைச் சிக்க வைக்கும் ஓர் வலையாய் விளங்கிற்று. நீதிபதிகளே பா திரிமார்களைப் போன்று மனத்துவேஷமும், கொடூர குண மும் படைத்தவர்களாயிருந்தனர். ஜூரிகளைக் கொண்டு நியாய விசாரணை நடப்பதில்லை. சொல்லக்கேட்ட வார்த் தைகளையும் சந்தேகக் குறிகளையும் கொண்டே எவனை யும் தண்டித்து விடலாம். தமக்கும் ஏற்படும் வதைக் கஞ்சி சாக்ஷிகளும் நீதிபதிகள் விரும்பியதை நிச்சயமாக சாக்ஷியங் கூறுவர்.

உலகத்தை இயற்கைக்கு மேலான பொருள்கள் ஆண்டுவந்தன. ஒவ்வொரு பொருளும் விலக்கப்பட்ட தே யொழிய ஒன்ருவது உணரப்படவில்லை திருச்சபை (Church) தான் தலைமை வகித்து வந்தது. நோயாளி கள் மந்திரிக்கப்பட்ட காகிதத் துண்டுகளை மதக் குருக்

களிடமிருந்து விலைக்கு வாங்கி வந்தனர். இறக்கும் தறு வாயில் நோயாளிகள் மருத்துவரைக் கூப்பிடுவதில்லை; ஆனால் மதக்குருக்களையே அழைப்பர். அவர்களும் மந் திரித்த காகிதத்தைத் தந்து பணம் வாங்கிடுவர். இத் தகைய சிறிய தாள்கள் ஒவ்வொரு "நாயன்மாரின்" (Saints) அருளால் சிற்சில நோய்களைத் தவிர்க்குமாம். ஒரு காகிதத் தாளைக் குழவி துயிலும் தொட்டிலினுள் போட்டுவைத்தால் அக்குழந்தை மாந்திரீகர்களால் கட் டுப்படுத்தப்படாது. மற்றொன்றை தானியம் கொட்டும் 'குதிரு'க்கள் அல்லது களஞ்சியத்தில் இடில் எலிகள் அதைத் தின்னாமல் போய்விடும். இன்னும் ஒன்றை ஒரு வன் இல்லத்தில் வைத்திருந்தால் துஷ்ட தேவதைகளும் குட்டிச்சாத்தான்களும் அணுகாவாம். வேறொன்றை ஒரு வயலில் புதைத்து வைத்தால் வேண்டும்போது நல்ல மழை பெய்யும், விரும்பிய அளவு விளைச்சல் பெருகும். கடவுள் அருளால் எல்லா நோய்களையும் தீர்க்கலாமென வும், அவைகள் தீருவதற்கு பிரார்த்தனை, மந்திரித்தல் நாயன்மார்களின் எலும்பை பரிசித்தல், இயேசுவின் கிராசின் (சிலுவையின்) துண்டுகளைத் தொடுதல், தூய நீரால் தெளிக்கப்படுதல், மந்திரித்த உப்பு, எண்ணெய் முதலியவற்றால் தெளிக்கப்படுதல் ஆகியவை இன்றியமை யாததெனவும் மதத்தின் குருக்கள் மக்களுக்கு போதி த்து வந்தனர்.

---

## இரண்டாவது அத்தியாம்.

வால்டையர் பிறந்த அக்காலத்தில் இறந்துபட்ட "நாயன்" மார்களே சிறந்த வைத்திய சிகாமணிகளென மதிக்கப்பட்டனர். (Saint Valentine) வேலன்டைன் நாயனர் எபிலப்சி என்னும் நோயைத் தீர்ப்பவர். கணுக்கால் வலி முதலிய வியாதிகளுக்கு (Saint Gervasius) ஜெர்வேஸியஸ் என்னும் நாயனர் இணையற்ற மருந்துவர். (Saint Judas) ஜூடாஸ் என்னும் குரு சளிபிடித்தல், இருமல் முதலியனவற்றைத் தவிர்க்கும் வைத்தியர். (Saint Ovidius) ஓவிடியஸ் என்னும் உத்தமர் செவிகேளாமையைத் தீர்ப்பவர். விஷப் பூச்சிகளின் கடிகளுக்கும், அரவு தீண்டினவிடத்திற்கும் செயின்ட் சொபாஸ்டியனைவிட வேறு யாரும் வல்லவரில்லை. பல் வலியைப் போக்க அப்போலோனியாவே பாண்டித்தியம் பெற்றவர். கிளோராவென்பவர் கண்ணேய்களுக்குக் கைகண்ட மருந்துவர். எனவே சாதாரண வைத்தியர்கள் இவ்வாறு மதக் குருக்களுக்கு வரும் வரும்படியைக் குறைப்பதனல் அவர்கள் தண்டிக்கப்பட்டு வந்தனர்.

குருக்கள் மக்களிடம் உபதேசித்து வந்தது என்னவெனில் உலக முழுதுமே எங்கு நோக்கினும் பேய்களும் பைசாசங்களும் நிறைந்து கிடக்கின்றன. ஒவ்வொரு மனிதனும் அவைகளுக்கு இருப்பிடமாகிய கொடும்பாவியாகின்றான். எனவே எவ்வளவுக்கெவ்வளவு அவன் குருக்களுக்கு அதிகமாக காணிக்கை சமர்ப்பித்து வணங்குகின்றானே அவ்வளவுக்கவ்வளவு அவன் அவற்றினின்றும் காப்பாற்றப்படுவான். சாத்தான் என்பவன்

ஆகாயத்தை ஆண்டு வருகிறான். எனவே மணியோசையாலும், பரிசுத்த நீராலும், சாம்பிராணி தூபம் முதலியவற்றாலும் அவனைத் துரத்தியடித்து நன்மை செய்வது குருமார்களின் கடமையாகும். கோவில் மணியின் குணாதிசயங்கள் கூறமுடியாதனவாகும். தூய தண்ணீரால் தெளிக்கப்பட்டு அது தன் கிணீர் ஓசையைக்கிளப்பின் உலகத்திலுள்ள துஷ்ட தேவதைகள் சென்றவிடம் தெரியாமல் மறைந்துவிடும். மற்றும் மணியோசையைக் கேட்ட மின்னலும், இடியும் கூட மக்களுக்கு யாதொரு இன்னலும் செய்யாதொழியும். பூச்சி பொட்டு என்பனவற்றின் பேரிலும் அக்காலத்திய மதம் போர் தொடுக்கும் வழக்கத்திலிருந்தது. எலிகளின்மீது ஏராளமான வழக்குகள் தொடர்ந்து தீர்ப்புகளும் சொல்லப்பட்டு வந்தன. ஒவ்வொரு குருமார் மடத்திலும் ஒரு மாந்திரீகப் பாதிரி சாம்பிராணியும், உப்பும், சம்பத்தளிக்கும் சிறு சாமான்களும் மக்களுக்கு விலைக்கு விற்றுவருவான். ஆராய்ச்சியாளர்கள் அனைவரும் அபாயகரமானவர் என்றும், கூரறிவு படைத்த சிந்தனையாளர்கள், கூடா நட்பின் குற்றவாளிகளென்றும் கருதப்பட்டு வந்தனர். இவ்வாறு மாந்தரின் அறிவு வளர்ச்சியை அநேக வழிகளில் மதமும், குருக்கள் கூட்டமும் தடைப்படுத்திச் சிதைத்து வரலாயின.

உண்மையான சுதந்திரம், ஒழுங்கான கல்வி, உயர்வான தத்துவ நூல்கள், ஒளி தரும்பும் விஞ்ஞான நூல்கள் யாதொன்றும் அக்காலத்தில் கிடையவேகிடையாது. எங்கு நோக்கினும் இரண்டு பொருள்களே வதிந்து வந்தன. அவைதான் கோவில்களும், குட்டிச் சாத்தான்களும் ஆகும்.

மதத்தின் குருக்களே மக்களுக்கு பேய், பைசாசம், சாத்தான் முதலியவற்றில் முழு நம்பிக்கையை உண்டு பண்ணி வந்தனர். எனவே மதத்தின் எதிரிகள் அனை வரும் குருக்களின் கையில் அடங்கிக் கிடக்க நேர்ந்தது. அவர்கள் பார்த்து, யாராவது ஒருவன் குட்டிச்சாத்தா னுடன் நட்புக்கொண்டு வாழ்கின்றான் எனக் கூறிவிடின் அறிவற்ற பாமர மக்கள் அவனைத் தோலையுரித்துத் தொலைத்து விடுவார். எனவே இந்த மூட நம்பிக்கை யானது ஒவ்வொரு நண்பனைப் பற்றியும், மனைவி, மக் கள், தாய் தந்தையரிடமும் சந்தேகத்தை உண்டுபண்ணி துன்பத்தை உண்டாக்கி வந்தது. இந்த மூட நம்பிக்கை மக்களின் மனிதத் தன்மையைப் போக்கி, நியாயம் என் பதை நீக்கி, நேசம் என்பதின் நிம்மதியைத் தாக்கி உல கத்தையே வெறுக்கத் தகுந்த விஷமிகு பைசாசங்களின் வீடாக ஆக்கி வாழ்க்கையையே வீணாக்கிவிட்டது. இத் தகைய நம்பிக்கை கத்தோலிக்கர் மட்டிலுமேயன்றி புரா ட்டஸ்டண்டு மதத்தினரிடத்தும் வதிந்து வந்தது.

நமது வால்டையர் தோன்றிய காலத்தில் கோவில் களும், குருக்களுமே பிரான்ஸ் தேசத்தை ஆண்டுவந்த னர். அழுக்காறு என்பது தாண்டவம் ஆடி ஆரவாரித் திருந்தது. குருக்கள்மார் அனைவரும் லௌகீக இன்பப் பிரியராயும், நீதிபதிகள் யாவரும் கொடூர குணத்தினரும், கூலிக்குழைப்பவராயும் இருந்து வந்தனர். மன்னன் வாழ்ந்த அரண்மனை மாதர் மிகுந்த விபசார விடுதி என விளங்கிற்று. அக்காலத்திய பணக்காரர், பிரபுக் கள் முதலியவரது உள்ளத்தில் ஈரம் என்பது இம்மியு மின்றி, இறுமாப்பு, குரூர குணம் ஆகிய பேய்கள் தலை

விரித்துத்தாண்டவமாடின. பாமர மக்கள் அனைவரும் விலங்குகளிலும் கேவலமாக வாட்டப்பட்டு வந்தனர். இத்தகைய இன்பகரமான சமூக நிலைமையை யுண்டாக்க கிறிஸ்து மதத்திற்கு ஆயிரமாண்டுகள் பிடித்தது.

ஒவ்வொரு குருவும், ஒவ்வொரு பிரபுவும் தன்னையறியாமலே புரட்சிக்கு விதையை சிதறியும் புதைத்தும் வந்தனர். மனப்புழுக்கம் மிகுந்த மக்கள் உள்ளத்தில் அவ்வித்துக்கள் அனைத்தும் முளை கிளம்பி முதிரவாரம்பித்தன. ஏழையழுத கண்ணீர் அவைகட்கு தண்ணீர் பாய்ச்சி இனிது வளர்த்தது. வசவும் உதையும் வட்டிக்கு வட்டி பெற்று வளரலாயின. இரத்தவேட்கை மக்களிடத்து ஏற்படலாயிற்று. பசிப்பிணி தன்னால் தாக்கப்பட்டும், பகலவன் தன்னால் வாட்டப்பட்டும், பலம் சிதைந்து நைந்த தொழிலாளிகள், அழகுமிகுந்த மாதர்கள் தம் அணிபெறு வெண்மைத் தொண்டையைக்கண்டு "அவைகள் தம்மை அறுப்பதென்றோ?" என்றரற்றி ஏங்கி நின்றனர்.

பிரான்ஸ் தேசம் இந்நிலையிலிருப்ப, ஏனைய நாடுகள் எவ்வாறிருந்தன என்பதை நோக்குவோம். இங்கிலாந்திலே முதலாவது ஜார்ஜ் என்பவர் சுகவாசியாக இருந்தார். இரண்டாவது ஜார்ஜ் என்பவர் ஆங்கிலேய மக்களையும், அவர் தம்மொழியையும் வெறுப்பினும் அவர்களால் விக்ரக ஆராதனைக்குரிய வேந்தராய் மதிக்கப்பட்டும், வணங்கப்பட்டும் வந்தார். 223 குற்றங்கள் தூக்கு தண்டனை விதிக்கப்பட்டதாயின. சிறைச்சாலைகள் அனைத்தும் குற்றவாளிகள் செறிந்தவண்ணம் கிடந்தன; தூக்குமேடைகள் யாவும் போக்குவரத்துக் கிடமின்றிப்

பொதிந்து நின்றன. மதமானது கிரியைகளைக் கொண்டும், மன்னர் வாள், நாண் முதலியவற்றைக் கொண்டும் மக்களை முறையே சீர்திருத்த முன் வந்தன

ஸ்பெயின் தேசத்திலே (Inquisition) பரிசோதனைத் திட்டம் பரபரப்புடன் வேலை செய்து வந்தது. மனத்தின் சுதந்திரம் வளரவொண்ணாதபடி கனத்த பல ஆயுதங்களால் மக்கள் வதைக்கப்பட்டனர். நுட்பம் வாய்ந்த யூதர்களை (Jews) யும் கைத்தொழில் கண்ணியம் பெற்ற மூர் (Moors) களையும் தன்னிடமிருந்து துரத்தி யோட்டிய ஸ்பெயின் தேசமானது மெதுவாக உண்மை மதத்தின் வன்மையற்ற நிலைக்கு வந்துவிட்டது. போர்ச்சுகல் தேசத்திலோவெனின், மகா கருணை பொருந்திய கடவுளை மகிழ்விப்பதற்காக மனைவியர்களையும், மக்கள் தமையும், திருநாள் தன்னில் புலால் தின்றதற்காக தீயிலிட்டு வேகவைத்து வந்தனர்! ஜர்மனி தேசத்திலே, ஆண் பெண் அனைவரையும் மனிதனின் பகைவராய் சாத்தானிடம் தோழமை கொண்டார் எனும் சாக்கால் நெருப்பிலிட்டு வாட்டி நியாயம் வழங்கிவந்தனர்! அமெரிக்காவிலும், இரக்கமற்ற குவேக்கர் என்னும் கூட்டத்தர் ஆண்களையும், பெண்களையும் வேறு நாடுகளிலிருந்து தூக்கி வருவதும், தாய்மார் பின் அணைப்பிலிருந்த தனி இளங்குழவிகள் தம்மைப் பிடுங்கிவந்தும், வேலை செய்த ஆட்களுக்கு சவுக்கால் கூலி வழங்குவதுமாய் அட்டகாசம் செய்து வந்தனர்.

மூட நம்பிக்கையே உலக முழுவதையும் ஆண்டுவந்தது.

பிரான்ஸ் தேசத்திலே மக்கள் அனைவரும் மன்னனின் விளையாட்டுக் கருவிகளாகவே மதிக்கப்பட்டனர். சிறைச்சாலையின் நிழல் தேசமெங்கணும் வீழ்ந்து பயமுறுத்தியது. அரசன் நடக்கும்போதே அவன் பின்னால் நடப்பவன் கொலைஞன் ஆவான். அரண்மனையிலும் சிம்மாசனத்தின் பின்னால் சித்திரவதைக்கூடம் சேர்ந்திருக்கும். குட்டை மரமும், தீயிட்டெரிக்கும் கட்டுக்கழிகளுமே மதத்துக்கு ஊன்றுகோலாக விளங்கின. பிரபுக்களும், அர்ச்சகரும் பீடுடையவர் ஆவர். ஏழை மக்கள் அனைவரும் புழுக்களுக்கு சமம். சோம்பேரிக் கூட்டத்தார் சோறும், விருந்தும் தின்று கொழுத்தனர். பாடுபட்டுழைப்பவர் சிந்திய வெந்த பருக்கையைப் பசிக்குப் போதாமல் மென்று நசித்தனர்.

## மூன்றாவது அத்தியாயம்.

வால்டையர் என்பார் பெரிய வம்சத்தில் பிறந்தவரல்லர். அவர் சாதாரண மக்களைச் சார்ந்தவர் ஆவர். உருப்படியான மூதாதையர் அவருக்கு ஒருவரும் இல்லை. அவரது உண்மையானபெயர் பிரான்காய் மேரி அருவே. இவர் ஏழு ஆண்டின் இளைஞராயிருக்கும்போதே இவரது அன்னை இறந்துபட்டனர். ஆர்மாண்டு என்னும் பெயருடைய அண்ணன் ஒருவன் இவருக்கிருந்தான். அவன் எவ்வளவுக்கெவ்வளவு மதத்தில் பித்தம் பிடித்தவனோ அவ்வளவுக்கவ்வளவு பிறரின் மனதிற்கு பிடியாதவனாயிருந்து வந்தான். தனது சகோதரனின் நாத்திகத்தை மன்னிக்குமாறு வேண்டிக் கடவுளுக்குக் காணிக்கை செய்யும் கைங்கரியத்தை அவன் மேற்கொண்டிருந்தான்.

'அரூவே' வம்சத்திலேயே ஒருவரும் எழுதும் ஆற்றல் படைத்திருந்ததில்லை. அவர்களுடைய இலக்கிய ஆற்றல் மிகவும் அற்பமே. சாலியூ என்னும் ஓர் தம்பிரான் அவருடைய வளர்ப்புத் தந்தையாயிருந்தார். ஆனல், தம்பிரானுயினும் இவர் இறைவனுடைய அன்பினல் மேம்பட்டவர் அல்லர். தனது 'சம்பளம்' வரும் வரையில் சாமியிடம் அக்கரை காட்டுபவர் அவர். அவரது மதச் சம்பிரதாயங்கள் தனது மதச் சம்பள அளவிலே நின்றுவிடும். வால்டையரின் தந்தை அவரை ஒரு வழக்கறிஞராக்க விரும்பினரெனினும் வால்டையருக்கோ சட்டத்தில் சிறிதெனினும் இட்டமென்பதே இல்லை. தனது பத்தாம் ஆண்டில் லூயீலா கிராண்டு என்னும் பாதிரிமார்களது பள்ளியில் சேர்ந்து, ஏழு ஆண்டுகள் கல்வி பயின்று தனது பதினேழாமாண்டில் பள்ளியினின்றும் நீங்கிவிட்டார். வால்டையர் அதன் பின் யாதொரு பள்ளியும் அணுகிலர். மேற்கூறிய பாதிரிப் பள்ளியில் அவர் பயின்றதெல்லாம் சிறிதளவு கிரேக்க பாஷையும் சாதாரணமாக லத்தீன் மொழியும் பெருவாரியான அபத்தங்களுமேயாகும். அந்தக்கல்லூரியில் பூகோள சாத்திரமும், சரித்திரமும், பெருங் கணக்கும், மற்றெந்த ரசாயன நூலும் போதிப்பதே கிடையாது. அக்காலத்திலே மதமானது மன்னரால் பாதுகாக்கப்பட்டும், மற்றபடி உதவி செய்யப்பட்டும் வந்தது. மதத்தைக் காப்பதற்கு ஆயுதங்களாய் ஈட்டி முனையும், இலங்கு கோடரியும், வாட்டிடும் சக்கரமும், வதைக்கும் தீச்சுள்ளிகளும், கேட்டவுடன் திடுக்கிடச் செய்யும் சித்திரவதைக் கூடங்களும் எத்தினமும் தயாராய் இலங்கின.

வால்டையர் என்னும் இவ்வாலிபன் லூயிலா கிராண்டு கல்லூரியில் வாசிக்கும் அக்காலமெல்லாம், அந்நாட்டு மன்னன் ஏவி விட்ட ஆட்களெல்லாம் மின்னுட்டு மேகம் மிகப்படர்ந்து சூழ்ந்த சிவின்னஸ் என்னும் சிகரஞ்சேர் மலைக்கருகில் பிராட்டஸ்டண்டு மதத்தினரை வேட்டையாடிப் பிடித்து வந்தனர் அத்தகைய பிராட்டஸ்டண்டு மக்களை கருணையற்ற நீதிபதியின் கட்டளையின்படி, தூக்கிலிட்டுத் தொங்கவிட்டும், குட்டை மரத்திட்டுக் குற்றுயிராய்க் கொலை செய்தும், வேகமுறும் சக்கரத்தால் வேறுவேறாய் உடலை வதைத்தும், வெப்பமுறுந் தீயழலால் வெந்து பொடியாக வைத்தும், பல்வேறு தண்டனைக்காளாக்கினர்.

தனது பதினேழாமாண்டில் வால்டையர் தனது வாழ்வை இலக்கியத்தில் செலவிட நிச்சயமாய் எண்ணிவிட்டார். இதைக்கண்ட இவரது தந்தை "உரை நடையில் ஒருவனும் செய்யுள் நடையில் ஒருவனும் ஆக இரண்டு முட்டாள்களை நான் புதல்வராகப் பெற்றுள்ளேன்" என்று சினந்து கூறி மனந்தளர்ந்தார்.

1713-வது ஆண்டிலேயே வால்டையர் ஒரு தந்திர நிபுணராக நடிக்க ஆரம்பித்துவிட்டார். அவர் ஓர் மங்கையைக் காதலிக்கலாயினர். ஆனால் அப்பெண்ணின் அன்னையோ பெருந்தடையாயிருந்தாள். தன் காதலி ஆண் வேடம் பூண்டு தன்னை வந்தடையும்படி அவர் தன் உடைகளையனுப்பி சகல விஷயங்களையும் தயாரித்திருந்தும் அவரது சூழ்ச்சி கண்டுபிடிக்கப் பட்டுவிட்டது. அதன்பின் வால்டையர் தன் காதலிக்கு பின்வருமாறு

கடிதம் வரைகிறார். "காதலியே! உனது அன்னையின் சீற்றத்திற்கு அனுவசியமாக நீ ஆளாகவேண்டாம், உனது அன்னையோ ஒன்றும் அறியாதவள் என்று உனக்கு நன்கு தெரியும். பாசாங்கு செய்தால் தான் நமக்கு வழியுண்டு. வேண்டுமென்றே என்னை நீ மறந்துவிட்டதாகவும், வெறுப்பதாகவும் கூறு. அதன்பின் உண்மையாகவே என்னை அதிக ஆர்வத்தோடும் நேசி" இவ்வார்த்தைகள் வால்டையரின் மனப்பான்மையக் காட்டுகின்றன.

இந்தக்காதல் சம்பவத்திற்காக இவரது தந்தை இவருக்குச் சொத்துரிமையை மறுத்துவிட்டார். அவர் வால்டையரை சிறைச்சாலைக்குச் செல்லவேண்டும் இல்லையேல் நாடுகடத்தப்படுவர் என்று பயமுறுத்தினர். இறுதியாக வால்டையர் ஒரு வழக்கறிஞராக வரச் சம்மதித்தார்.

இது சமயம் பிரான்சு தேசத்தரசன் அவ்வூர் கோயிலில் உண்டாக்கிய ஓர் புதுமையைப் பாராட்டி ஒரு பரிசுப் பாடலியற்றினர். ஆனல் அப்பரிசுப்பந்தையத்தில் அவர் தோற்றுப் போய்விட்டார். வழக்கறிஞர் ஒருவனிடம் சிறிது காலம் வாழ்ந்துவிட்டுப் பின், சட்டத்தை வெறுத்துத் தன் இஷ்டத்தின் படிக்கெல்லாம் கவிகளும், நாடகங்களும் இயற்றலாயினர் நம் வால்டையர். அக்காலத்தில்தான் மிகப்பெரிய சம்பவங்கள் அந்நாட்டில் நிகழ்ந்து வந்தன.

1552-ம் ஆண்டில் டாக்டர் பாயஸ் என்பவர் மக்களது 'மனச சுயேச்சை, (Free will) என்னும் கருத்துக்கு மாறுன 'விதியின் பலன்' என்பதைப் பற்றிப் பல

பிரச்சினைகளைக் கிளப்பியிருந்தார். இவற்றுள் எழுபத்தாறு கொள்கைகளை மதத்திற்கு மாறானது என்று சில சந்நியாசிகள் எடுத்துக்காட்டவே அப்போதிருந்த போப்பரசர் அவைகளைக் கண்டிக்கும் புல் (Bull) ஒன்றை உண்டாக்கினர். இந்தக் கண்டன வாசகத்தில் தவறுதலாக ஏற்பட்ட ஒரு கால் புள்ளி (Comma)-யின் காரணமாக ஒரு பெரிய சந்தேகம் தோன்றிவிட்டது. டாக்டர் பாயஸ் என்பவரின் தோழர்கள் போப்பரசர்க்கெழுதி அந்தக் கால் புள்ளி எந்த இடத்தில் கிரமமாக இருத்தல் வேண்டும் என்று விண்ணப்பித்துக் கொண்டனர். ஆனால், வேலை மிகுந்த போப்பரசரோ சந்தேகம் உண்டாக்கிய வாக்கியத்தில் கால்புள்ளியே இல்லாதகண்டன வாசகத்தை அவர்களுக்கனுப்பி விட்டனர். ஆகையினாலே இந்தத் தகராறு வளர்ந்துகொண்டே போயிற்று.

மற்றும் ஜேன்சனியர்களுக்கும், மாலினியர்களுக்கும் ஓர் பெருத்த வழக்கு நடந்துகொண்டே இருந்தது. மாலினி என்னும் ஓர் ஸ்பெயின் பாதிரி "மனிதனது அறிவானது யதேச்சையானது தான், ஆனால் கடவுள் அவன் அதை எவ்வாறு உபயோகிக்கிறான் என்று கண்காணித்து வருகிறார்" என்னும் கொள்கையைப் பரப்பி வந்தான். ஆனால் ஜேன்சீனியஸ் என்னும் ஓர் பிரான்சு பாதிரியோ வெனில் கடவுள் விதிப்பின் முடியாதனவெல்லாம் முடியுமென்றும், கிறிஸ்து எல்லோரது நன்மைக்கும் இறக்கவில்லை என்றும் ஒருபுறம் வாதாடி வந்தான். 1641-ல் ஜேன்சீனியஸின் கொள்கைகளில் ஐந்தைக் கண்டித்து போப்பரசர் ஒரு கண்டன வாசகம் (Bull) அளித்தார். ஆனால் ஜேன்சீனியர்களோ மேற்கண்டித்த ஐந்

தோ அல்லது ஒன்றேனுமோ தங்களது கொள்கைகள் அல்லவே அல்ல என்று அரற்றி மறுத்தனர். எனவே இந்தத் தகராறு பிரான்சு தேசத்தில் இருநூறு ஆண்டு களாக இருந்துவந்தது.

வால்டையரது காலத்திலே மேலே கூறிய விவாதம் முழுதும் போப்பரசரால் கண்டனம் செய்யப்பட்ட ஐந்து கொள்கைகளும் ஜேன்சீனியஸினுடையதா அல்லவா? என்னும் கேள்வியால் அடங்கிவிட்டது. ஜேன்சீனியர்கள் அக்கொள்கைள் தங்களுடையன அல்லவென்றும் அதற்கு க்காரணம் பாஸ்கல் என்பவரின் தங்கை மகனது கண் நோய் கிறிஸ்துவின் தலையிலிருந்தெடுத்த முள்ளொன் றின் மகிமையால் தீர்க்கப்பட்டது என்றும் கூறி ஆரவாரித்தனர். ஆனால் 1713-ல் எல்லா ஜேன்சீனியர்களும் நாட்டிலுள்ள சிறைக் கூடங்களில் நிறைக்கப்பட்டனர். மனிதனின் சுயேச்சை அறிவும், விதிப்பயனும்' என்பது போன்ற கேள்விகள் நாகரீக உலகத்தின் நாட்டத்தை நீண்ட காலமாகக் கொண்டுவந்தது. இக்கேள்விகளைப் பற்றி அப்போதிருந்து இப்போது வரைக்கும் சுவிஜர் லாந்திலும், ஹாலந்திலும், ஸ்காத்லந்து, இங்கிலாந்து, நியூ இங்கிலாந்து முதலிய தேசங்களிலும் விவாதங்கள் நடந்துகொண்டே தான் வருகின்றன.

பதினான்காம் லூயி என்னும் மன்னன் இறந்தபின் னர் அந்நாட்டையாண்ட ரீஜண்டு எல்லாச் சிறைக்கூடங் களின் கதவுகளையும் திறந்துவிட்டனன். அவன் அரச னது ஆக்ஞைப்படி சிறை செய்யப்பட்ட கைதிகளின் ஜாப் தாவை ஆராய்ந்தனன். ஏராளமான கைதிகள் சிறை யிடப்பட்ட காரணங்களே இன்னதென்று விளங்கவில்லை.

அவர்களைப்பற்றி அனைவரும் மறந்துவிட்டனர். பல கைதிகளுக்குத் தங்களைத் தாங்களே கண்டு கொள்ளவும் முடியவில்லை. தாங்கள் கைது செய்யப்பட்டதின் காரணங்களும் ஞாபகமில்லை. பாஸ்டைல் (Bastile) என்னும் சிறைச்சாலையில் ஒரு இத்தாலியன் முப்பத்துமூன்று வருடங்கள் வாடிக் கிடந்தும் தான் கைதியான காரணம் தெரியாமலும் இருந்தான். முப்பத்துமூன்று ஆண்டுகட்கு முன்னர் பாரிஸ் நகரத்தைச் சேர்ந்தவுடன் அவன் கைது செய்யப்பட்டு அங்கு அனுப்பப்பட்டான். அவன் மிகக் கிழவனாகியதுமன்றி தனது தோழர்களையும், சுற்றத்தார்களையும் இழந்துவிட்டான்.

ஏனைய கைதிகளையெல்லாம் விடுவித்தபோது இவனது வேண்டுகோளின்படியே இவன் மட்டும் அச்சிறைச்சாலையிலேயே தனது எஞ்சிய காலத்தையும் கழிக்க அனுமதிக்கப் பட்டான். ஆனால் பழைய கைதிகள் விடுவிக்கப்பட்ட மறு நிமிடமே அச்சிறைக்கூடங்கள் புதிய பேர்களால் நிறைக்கப்பட்டுவிட்டன.

இக்காளிலே வால்டையருக்கு பரந்து நீண்ட இவ்வுலகத்தில் அதிக பந்தமில்லாதிருந்தது. அவருக்கு அப்போது மதத்தைப்பற்றியும் அரசாங்கத்தைப் பற்றியும் சிறிதும் தெரியாது. ஆனால் அவர் செய்யுள் இயற்றியும் வைய வாழ்க்கையின் நாடகம் வரைந்தும் சிந்தனை உலகத்தில் சிறகுடன் பறந்து வந்தனை செய்து இலக்கியத்தை வளர்த்து வந்தனர். ஏதோசில எறிந்து விழக்கூடிய வாக்கியங்களை எழுதினாரென்ற குற்றத்திற்காக இவர் முந்நூறு மைலுக்கு அப்பாலுள்ள டூல் (Tulle) என்னும் இடத்திற்கு நாடு கடத்தப்பட்டார். இங்கிருந்துகொண்டு

எழுதுகிறார் வால்டையர் "நான் இருக்கும் ஸ்தலம் உல கத்திலேயே சௌகரியமானது தான், ஆனால் நான்மட் டும் இதற்கு தண்டனைக்காரணமாக வாராதிருக்க வேண் டும். இவ்விடத்தில், நான் இதைவிட்டு ஏகச் சுதந்திரம் இல்லை என்பது தவிர வேறு யாதொரு இன்பக் குறைவும் இல்லவே இல்லை, நான் மட்டும் விரும்பும்போது இதை விட்டுப் போகமுடியுமானால் இதில் வசிப்பதற்கே ஆனந் தமாயிருக்கும்."

இறுதியாக அவர் மீண்டும் தன்னாட்டிற்கு வர ஏது வாயிற்று. மறு முறையும் இவரைக் கைது செய்து பாஸ் டைல் என்னும் சிறைச்சாலையில் ஓராண்டு வைத்திருந் தனர். அப்போது தான் இவர் தனது பெயரை வால் டையர் என்று இதுகாறும் உலகம் வழங்கும் பெயராக மாற்றிக்கொண்டார்.

வால்டையர், இளவேனிற் காலத்திய எழில் மலர் கொத்துகள் போல் எண்ணிறந்த அபிப்பிராயங்களை மன் னரென்றும், திண்ணரென்றும் மதியாது உலகத்திற்கு வழங்கி வரவே அவர் இங்கிலாந்திற்கு நாடு கடத்தப்பட் டார். பகலவன் மிளிரும் பிரான்சிலிருந்து பனியும், கட் டியும் படர்ந்த ஆல்பியன் என்னுமிடத்திற்கு ஏகினர். ஆனால் இங்கிலாந்திலுள்ள பெரிய மனிதரிடமும், அறி வாளிகளிடமும் பெருமித நட்பைக் கொண்டனர் வால் டையர். அவர் வார்த்தை வாய்ப்பாளரும், மணமற்றதாயி னும் எழில்தரும் குணமுற்றதாகிய சொன்மலர் இயற்றும் நன்மதிப்பார்ந்தவருமாகிய போப் Alexander என்னும் ஆசிரியரைச் சந்தித்தனர். "இரவின் எண்ணங்கள்" என்

பதை இயற்றியவரும், சிந்தனையொழுக்கச் சிகாமணியும், மேற்றிராணியாவதற்கு மன்னனின் காதலியைப் போற்றி செய்த புனிதனும் ஆகிய யங் (Young) என்பவரது பரிச்சகமும் அவருக்குக் கிடைத்தது. இன்னும் ஏனைய அறிவாளர்களாகிய செஸ்டர்பீல்ட், தாம்சன், சுவிப்ட் Swift, கான்கிரீவ் முதலியவர்களது சிநேகத்தையும் சம்பாதித்துக் கொண்டார் நம் வால்டையர்.

## நான்காவது அத்தியாம்.

வால்டையர் நாளடைவில் விஷயங்கள் பலவற்றைச் சிந்திக்க ஆரம்பித்தார், பின் சந்தேகமுற்றார், அதன்பின் விசாரணை செய்ய முற்பட்டார். கிறிஸ்துவ கோயில்களின் சரித்திரத்தைப் படித்தார்; கிறிஸ்துவ மதத்தின் விர்த்தாந்தத்தை விசாரணை செய்யலுற்றார். அதன்பின் அவருணர்ந்ததாவது தன்காலத்திய மதமானது மத நூல்களின் அருளாலும், தவறுதல் செய்யாக் கோவிலினாலும், பித்த சந்நியாசிகளின் கனவுகளாலும், பிதற்றல் செய்யும் பாதிரிகளாலும், குற்றங்கள் புரிந்த குருக்களாலும், கற்றலும், அறிவும் இல்லா மக்களாலுமே காப்பாற்றப்பட்டு வருகின்றது என்பதே. இன்னும் பல விபரீதமான காட்சிகளும் அவருக்கு விளங்கலாயின. கிறிஸ்து மதத்திற்குக் கை கொடுத்து பலமளித்த கான்ஸ்டன்டைன் என்னும் கருணை பொருந்திய சக்கரவர்த்தி எந்த வருடத்தில் கிறிஸ்துவானவர் சாதாரண மனிதரா அல்லது சாமியின் புதல்வரா என்பதை நிர்ணயிக்க நைஸ் சபையைக் கூட்டினானோ அதே வருடத்தில் அவன் பாஸ்டா (Fausta) என்னும் தன் பத்தினியையும், கிரீஸ்பஸ் (Crispus)

என்னும் தன் மூத்த புதல்வனையும், கொலை புரிந்துள் ளான் என்னும் கோரக் காட்சியையுங் கண்டுணர்ந்தார். 325-வது வருடத்தில் அந்த "நைஸ் சபை" (Council of Nice) கிறிஸ்துவானவர் கடவுளின் அத்வைத ரூபி (Consubstantial) என்று முடிவு கட்டிற்று எனவே கிறிஸ்து மதத்தின் முக்கிய கொள்கையாகிய 'கிறிஸ்துவின் தெய்வீகம்'' என்பதை நிலை நிறுத்திய மாபெருந்தொண்டை ஆற்றிய மகான் பத்தினியைக் கொன்றதொரு பாதகனும், புத்திரனை மாய்த்ததொரு புன்மையனுமாவான் என்பதைக் கண்டார் நம் வால்டையர். மற்றும் தியடோஸியஸ் என்னும் மன்னர் 381-வது ஆண்டில் கான்ஸ்டாண்டி நோபிளில் ஒரு கவுன்சிலைக் கூட்டி பரிசுத்தத் திருவுருவம் (Holy Ghost) பரம தந்தை (கடவுள்) இடமிருந்து பிறந்தது என்று தீர்மானித்தார் எனவும், தியடோலியஸ் (இளைஞர்) என்ற மற்றொரு வேந்தர் 431 வது வருடம் எபீசஸ் என்னுமிடத்தில் இன்னொரு சபையைக் கூட்டி கன்னிமேரியே கடவுளின் அன்னையென்று முடிவு கட்டினர் எனவும்; 451-வது ஆண்டில் மார்ஷியன் என்னும் ஓர் சக்கரவர்த்தி சால்சிடான் என்னும் தலத்தில் மற்றும் ஓர் சபையை அழைத்து கிறிஸ்துவுக்கு இரண்டு சக்திகள் இருந்தனவென்று நிலை நிறுத்தினர் எனவும், 680-வது ஆண்டில் பாக்னேஷியஸ் என்பவர் வேறொரு கவுன்சிலரின் மூலம் மேற்கூறிய இரண்டு சக்திக்கு ஏற்ப இரண்டு தன்மைகள் கிறிஸ்துவுக்கு இருந்தனவென்று விடையிறுத்தார் எனவும், கடைசியாக 1274 வது வருடம், பரிசுத்தத் திருவுருவம் பரம தந்தையிடமிருந்து மட்டுமின்றி கடவுளின் பாலகனிடமிருந்தும் கூட ஏக காலத்தில் உதித்தது என்னும் மிகவும் முக்கிய

மான உண்மையானது லையன்ஸ் சபையில் கண்டித்து நிலை நிறுத்தப்பட்டது எனவும் நமது வால்டையர் வகை யாய் உணர்ந்தார்.

எனவே அளவுக்கடங்காத கடவுள் பிழைத்தலில் லாக் (குற்றம் செய்யாத) கோயிலுக்கு பிரளய காலத்தி லேயே விவரிக்கப்பட்டுள்ளவை என்று பிதற்றப்பட்ட இந்தச்சில சிறிய விஷயங்களை உலகம் உணர்ந்து தெளிய ஆயிரத்து முந்நூறு ஆண்டுகள் பிடித்தனபோலும்.

அறிவற்ற இந்த மதம் உலகம் முழுவதிலும் கொடூ ரத்தையும், கிலியையும், செறிவுறச் செய்தது என்பதைத் தெள்ளிதின் தெரிந்தார் வால்டையர். மற்றும் ஒழுக்கத் தைக் காட்டிலும் உடைகள் உயர்ந்தனவென்றும், சிலை களும், சிலுவைகளும் புதைந்த எலும்பின் துண்டுகளும், சிதைந்த மரத்தின் சிறு பாகங்களும் மக்கள் தம் உரிமை யினும் மற்றுமவர் உயிரினுமே மிகச் சிறந்து விலையுயர் ந்த மேன்மைப் பொருள் என்றும், மேல் கண்ட பண்டங் களைப் பாதுகாப்போர் மக்களுக்கே பகைவர் என்றும் எங்கு நோக்கினும் எண்ணங்கள் பரவி இருந்தன.

எனவே நமது வால்டையர் இந்த ''வெற்றி மிருகத் தை'' வெட்டி வீழ்த்துவான் தன் வீரம் பொருந்திய இயல்பையும், சாரம் பொருந்திய மனத்தின் சக்தியை யும் உபயோகிக்கலாயினர்.

பகுத்தறிவைப் பரப்ப வந்த பரமன் நம் வால்டை யர். முதன் முதலிலே ஏக பாஷையாய் ஓர் மொழி இரு ந்து அதினின்று நாளடைவில் அநேக மொழிகள் பிறந்

திருக்க முடியாது என்பதை அவர் முற்றிலும் உணர்ந்தவர். ஒவ்வொரு பாஷையும் அவ்வம் மக்களின் சுற்றுப்புற நிலைமைகளால் கட்டுப்படுத்தப்பட்டது என்பது அவருக்கு நன்கு தெரியும். மற்றும் பனிக்கட்டியும், பனித்துளியும் கழறும் பாஷையும், பனைமரமும் பனிமலரும் பகரும் மொழியும் ஒன்ருயிருக்கமுடியாது. அவை வெவ்வேறு என்றும் அவர் அறிந்திருந்தார். அதுமட்டுமல்ல. மொழி வளர்ச்சியிலே யாதொரு விநோத சம்பவமும் நிகழ்ந்திருக்க முடியாதென்பதும் அவருக்குத் தெரியும். "பேபல் கோபுரக் கதை" உண்மையாயிருந்திருக்க முடியாதென்பதை அவர் அறிந்தவர். ஒவ்வொரு பொருளும் உலகத்திலே இயற்கையாகவே இயைந்துள்ளது. மந்திரத்தால் மாங்காய் விழுதல் என்னும் கொள்கையை மதத்தைப் பொருத்தமட்டுமல்லாமல் மற்ற விஷயங்களிலும் அவர் மறுக்கக்கூடியவர். மந்திரத்தால் தங்கம் செய்வதைச் சிறிதும் அவர் நம்பவில்லை என்பதற்குச் சான்று அவரது கூற்றே. அவர் கூறுவதாவது "இரும்பைப் பொன்னுக்க இரண்டு விஷயங்கள் அவசியம். அவையாவன:- ஒன்று இரும்பைப் போக்குவது, மற்ருென்று பொன்னை ஆக்குவது."

வால்டையர் என்பவரே நமக்கு சரித்திரத்தின் தத்துவத்தைச் சரிவரப் போதித்தவர்.

நல்ல தன்மையும், சந்தோஷத் தோற்றமும் வால்டையரிடம் நாளும் குடிகொண்டிருந்தன. கால்வின் என்பவர் கற்பித்த இயற்கைக்கு மாருன, இன்பந் தவிர்த்த, குரூரமான வாழ்க்கையை அவர் மனமார வெறுக்கும்

குணமுடையவர். உலகத்தில் சந்தோஷமாயிருக்கவும், சன்மார்க்கத்தில் நடக்கவும் ஒரு மதம் வேண்டும் என்னும் மக்களது மடமையைக் கண்டு அவர் பரிதாபப்படுவது வழக்கம். நிகழ் கால சுகத்தை நுகரும் தைரியமும் எதிர்கால வாழ்க்கையைப் பற்றிப் பதட்டம் கொள்ளாப் பொறுமையும், அவருக்கிருந்தது. இவ்வாறிருந்தும் நூற்றைம்பது ஆண்டுகட்கு மேலாக கிறிஸ்துவ உலகம் இவரோடு போர் புரிந்து இவரது ஞாபகத்தின் வியாபகத்தை நசுக்க முயன்றுள்ளது. மதப் பிரசார மேடைகள் தோறும் இவர் நாமமானப்பதப் பிரசாரம் செய்யப்பட்டு வசவு மொழிகளால் இவர் வாழ்த்துக் கூறப்பட்டும் வருகிறார். இவர் ஒருவரைப்பற்றி மட்டும் வைதீக மதத்தினர் இன்னும் முழு உண்மையையும் மொழிந்திலர். கத்தோலிக்கரும் பிராட்டஸ்டண்டு மதத்தாரும் எத்தேசத்திலும் இவரை ஒருங்கே எதிர்த்து வந்துள்ளனர்.

அர்ச்சகர்களும், ஆசிரியர்களும், பொற் சபையில் போதிக்கும் புனிதமார்ந்த குருமார்களும், மேற்றிராணியாரும் மிகப் பெரிய போப்பரசுகளும் வால்டையர் தன்னைத் தூற்றிடாமல் இருந்த தினமே கிடையாது. கோயிலின் பகைவனைப் பற்றிய உண்மையை குருமார்கள் உரைத்தற்கு விரும்பாததற்கும், முடியாததற்கும் நாம் வியப்படைகிறோம். ஓராயிர வருஷத்திற்கு மேலாக ஒவ்வொரு கோவில் மேடையும் வசவு மொழிக்குக் கொல்லன் பட்டரைகளென்றே இருந்து வந்துள்ளது.

தன் காலத்தில் வழங்கி வந்த மூடப்பழக்கங்களை முற்றிலும் ஒழிக்க வால்டையர் கங்கணம் கட்டிக்கொண்

டார். அவர் தனது ஆற்றல் அளிக்கும் ஒவ்வொரு ஆயுதத்தையும் கொண்டு யுத்தம் புரியலானுர். பழிப்புப் படம் வரைவதில் (Caricature) அவருக்கிணை ஒருவருமில்லை. எனவே அந்தக்கூரிய ஆயுதத்தைத் தன்போரிலே உபயோகித்துப் பலர் பேரிலும் விடுத்துச் சண்டை செய்தார் வால்டையர். பரிசுத்தமான தெள்ளிய அறிவுக்கூற்றில் அவரை வெல்லுதல் யாவர்க்கும் அரிது.

முகமன் இயம்புதலை முற்றுப் பெற்றகலை யெனவே கற்றுத் தெளிந்தவர் வால்டையர். கூரிய தந்திரத்தைச் சீரிய முறையில் கையாளுவதில் அவர் மிகச் சமர்த்தர். உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசும் உண்மையற்றவர் கூட்டத்தை உடைத்தெறிந்தார். பாசாங்கு செய்து பொய்யும் புனைசுருட்டும் பேசாநின்ற பட்டாளங்களைப் பதறச் சிதறவடித்தார் இப்பலவான்.

வால்டையர் தன் காலத்திய இழிவு குணத்தினரையும் ஈன புத்தியினரையும் ஒழியும்படி செய்தும் பாசாங்கு பல செய்து பல்லைக் காட்டிக் கெஞ்சி கூசாது முகமன் கூறி அர்ச்சகர் தம் "அருளையும்" பொன் மிகுந்தவரது போஷகத்தையும் வேண்டித் திரியும் புன்மையாளரைப் போக்கடித்தும் வந்தார். சிற்சில காலங்களில் அவர்களால் இவர் தொந்தரவளிக்கப்படினும் மற்ற வேளைகளில் இவர் அவர்களை இரக்கமின்றித் தாக்குவதுண்டு. இவர் அவ்வாறு அவர்களைத் தாக்கி இருக்கவில்லை என்றாலும் நெடுநாட்கு முன்னரே அவர்கள் மறக்கப்பட்டிருப்பர். இந்தப் பூச்சி பொட்டுகளையும் நாகப்பாம்புகளையும் வால்டையர் தனது ஆற்றலான வாசனைத்திரவியத்தில் வைத்து வளர்த்து வந்தார்.

வால்டையர் ஆழ்ந்த அறிவினர் அன்று எனக்கூறுவது வழக்கமாகிவிட்டது, ஏன் இவர் அப்படிக் கூறப்படுகின்றனர் என்றால் அதற்குக் காரணம் அவர் முட்டாளாக இல்லாமலிருந்ததேயாகும். ஆபாசக்காட்சியைக் கண்டு அவர் நகைப்பதுண்டு, ஆகவே அவரை பயபக்தி அற்றவர் என்பார்கள். (மிகக் கொடியராகிய) ஒரு புரோகிதனைக் கூட கடவுள் நீடூழி கண்டிக்கமாட்டார் என்று அவர் புகன்றால் அதை மதத்துவேஷம் என மக்கள் கூறுவர் கிறிஸ்தவர்களென்று கூறிக்கொள்பவர்கள் ஒருவர் கழுத்தை மற்றொருவர் அறுக்காதபடி தடுத்தும் கிறிஸ்துவைப் பின் பற்றுபவர்கள் எல்லாம் நாகரீகத்தை அடையும்படி செய்தும் வந்தார் வால்டையர். வால்டையரும் மற்ற மதத்தினரைப்போல் ஏதேனும் ஒரு மதத்தை ஏற்படுத்தி ஒரு தேசத்தைக் கைப்பற்றிக் கொண்டு சில மதத்துவேஷிகளை கொழுந்துவிட்டெரியும் தீயிலிட்டுக் கொலைபுரிந்து வந்திருப்பாரேல் அவரும் கிறிஸ்துவ உலகத்தின் அன்புக்கும் ஆச்சரியத்துக்கும் மரியாதைக்கும் பாத்திரராயிருந்திருக்க ஏதுவாகும். மற்றும் அவர் மட்டும் பழங்காலத்துப் பாட்டிக் கதைகளை நம்புவதாகப் பாசாங்கு செய்து லத்தீன் பிரார்த்தனையை முணுமுணுத்து ஜபமணி எண்ணி மண்டிபோட்டு அடிக்கடி கடவுளின் மாமிசத்தைக் கண்ணை மூடிக்கொண்டு தின்று கிறிஸ்துவின் பெயரைச் சொல்லி தத்துவ சாஸ்திரிகளைச் சுட்டெரிக்கச் சுள்ளிகள் பொறுக்கிப்போய் வந்திருப்பாரேல் இந்நேரமெல்லாம் அவர் சுவர்க்கலோகத்திலே சுகமாக வீற்றிருந்து சபிக்கப்பட்ட சண்டாளர்களின் சஞ்சலத்தைக் கண்டு நெஞ்சு களித்திருக்க முடிந்திருக்கும்.

வால்டையர் மட்டும் அவர் காலத்திய மதத்தை அனுஷ்டித்தும் அளவுக்கடங்காத ஆற்றலும், அன்பும் கொண்ட கடவுள் லட்சம் பத்து லட்சம் கொண்ட மக்களைத் தன் பிரதாபமான கருணை நீதியின் பேரால் நீடூழி துன்பம் அனுபவிக்குமாறு பிறப்பித்தார் என்று அரற்றியும், அத்தகைய கடவுள் ஒரு இத்தாலி தேசத்துப் போப்புக்குத் தன் காதற் கிழத்தியின் ஆன்மாவைக் காக்கவும் யாதொரு குற்றமும் இல்லா ஏனையர் மனைவியரைச் சபிக்கவும் சர்வ அதிகாரத்தையும் கொடுத்துள்ளார் எனக்கூறியும், அத்தகைய கடவுளின் நாசியில் சுட்ட மாமிச வாசத்தையும் சுள்ளிக் குச்சிகளின் புகையையும் சுரு சுரு என்று ஏற்றியும், அவர் தம் பரந்த செவிகளில் நாளும் சித்திரவதைப் படுவோரின் உபத்திரவக் கதறுதலையும் குட்டை மரத்திட்டவர் வாய்விட்டலறும் கூக்குரலையும் புகுத்தியும் புண்ணியம் செய்திருப்பாரேல் அவர் இன்று அர்ச் வால்டையர் என்று அனைவராலும் ஆராதிக்கப்படுவார்.

மனிதனின் மனதிற்கு இயல்பான ஆற்றல்கள் அனைத்தையும் உபயோகித்துப் பல்லாண்டுகளாய் நம் வால்டையர் ஐரோப்பா முழுவதிலும் தன் மூளையின் விளைவான கட்டுரைகள், சிறு மொழிகள், பெருங் கதைகள் அருஞ் சரிதைகள், சந்தோஷ நாடகங்கள், சஞ்சல நாடகங்கள், நறுஞ்சுவைக் கதைகள், அறுஞ்சுவைப் பாக்கள் முதலியனவற்றை நிரப்பி வந்தார். ஆனால் அதே காலத்தில் அவர் வணிகத்தில் வல்லமையும், கோடீஸ்வரனைப்போலப்பணத்தைக் குறித்துச் சேர்ப்பதில் நாட்டமும் அரசர் சபைப் பேச்சுகளில் ஆர்வமும், அர்ச்சகர் தம் பழிப்புச்

செயல்களில் கவனமும் செலுத்தித்தான் வந்தார். மற்றும் அதேகாலத்தில் வால்டையர் ரசாயன சாஸ்திர உண்மைகளையும் தத்துவ சாஸ்திரிகளின் கொள்கைகளையும் கவனித்துக் கற்றுக்கொண்டேதான் வந்தார். ஆனால் இவ்வளவு வேலைகளுக்கிடையிலும் மூடப் பழக்கமென்னும் முரட்டு அரக்கனைத் தாக்குதலில் மட்டும் தன் ஞாபகத்தை மறவாமல் நிலை நிறுத்திவந்தார். விழிப்பிலும் தூக்கத்திலும் கோயிலை அவர் வெறுத்தே வந்தார். இமை கொட்டாத நாட்டத்துடன் கவனித்தும் இரக்கமில்லா அரக்கனைப்போல் தாக்கியும் வந்தார், ஒரு மனிதனையும் சார்ந்து நிற்காமல் தனிப்படையாக நின்று, வெட்டவெளியான யுத்தகளத்திலும் சமயம் ஆகிய வேலிக்குப் பின்னுமாகச் சுமார் அறுபது ஆண்டுகள் வால்டையர் தமது போரை நடத்திவந்தார். அவரது வெற்றியே மிகவும் உசிதமானதாகும். அவர் ஒரு அரசனைப் போல் வாழ்ந்து வந்தார். ஐரோப்பாவிலேயே ஆற்றல் மிக்கவருள் ஒருவராய்த் திகழ்ந்ததன்னியில் இலக்கியத்திற்கே அவர் மூலம்தான் முதன் முதலில் முடிசூட்டப்பட்டது.

கிறிஸ்துவர்கள் வால்டையர்மீது குறை கூறுவதற்குள்ள காரணங்களில் சில என்னவென்றால்; அவர் பயபக்தியற்றவர் என்பதும், தெய்வீகத் தன்மை பொருந்திய விஷயங்களைத் தக்க சாக்தியோடு விசாரணை செய்வதில்லை என்பதும், 'அவர் எரிப்புதர்' (Burning Bush) முன்னர் தன் காலணியைக் கழற்ற மறுப்பதும், மோசசினுடைய லோக சாஸ்திரத்தைக்கண்டும் ஜோஷுவாவின் வான நூல் ஞானத்தைக்கண்டும், ஜோனு

வின் வாழ்க்கைச் சரிதத்தைக்கண்டும் எள்ளி நகையாடு கின்றனர் என்பதும் ஆகும். அவர்கள் கூறுவதாவது:- இந்த நடக்கமுடியாத தெய்வச் செயல்களையும் அருளால் உண்டான ஆபாசங்களையும் தாழ்மையும் நம்பிக்கையும் கொண்ட மனத்தோடு படிக்கவேண்டும். அவ்வாறு படித்து பிரார்த்தனையுடனே அவற்றை ஆராயவேண்டும் ஆனால் கடவுளை நமது பகுத்தறிவின் முடிவுகள் நம்மைக் கட்டுப்படுத்தாமல் இருக்கச் செய்யுமாறும் வேண்டிக் கொள்ளல் வேண்டும். இந்த அறிவிலிகள் ஒரு பொய் மையானது பழமையென்னும் காரணத்தால் மட்டும் உண்மையாகிவிடும் என்றும் அவ்வாறு அத்தகைய பொய் மையை மதியாது நடத்தல் பயபக்தியற்ற தன்மை என் றும் எண்ணுகின்றார்கள். கிரேக்கர்களது கடவுள்களைப் பற்றியும் மற்றும் ரோமர்களது, அல்லது சீனர்களது அல்லது இந்தியர்களது கடவுளர்களைப்பற்றியும் எவ்வாறு ஆராய்வோமோ அதேமாதிரிதான் வால்டையரும் யூதர் களது கடவுளர்களைப்பற்றிவிசாரணை செய்யமுற்பட்டார். இந்த உலகத்தில் மனிதனால் ஆராயக்கூடாதபடியும், அறி யக்கூடாதபடியுமான அவ்வளவு புனிதமான பொருள் இல்லவே இல்லை. தத்துவ சாஸ்திரி ஒன்றையும் மறைப் பதே கிடையாது. உண்மைக்கு இரகசியம் உறவு அன்று. ஒருவரும் தனது பகுத்தறிவைப் பறிகொடுத்து பயபக்தி யைச்சம்பாதித்தல் கூடாது. பகுத்தறிவுக்குச் சரியென்று பட்டால் ஒழிய ஒரு பொருளையும் வணங்குதல் கூடாது.

எல்லாவிதமான தீய மூடப்பழக்கங்கள் மீதும், தெய்வீகத் தவறுதல் மீதும் வால்டையர் பழிப்பு மொழி என்னும் தன் கூரிய அம்பை ஏவினார். அத்தகைய அம்

புகள் சிந்தனை என்னும் சிறகுகளோடும், அறிவு என்னும் கூர்மையோடும் உண்மை என்னும் விஷத்தினேடும் வேகமாகச் சென்று மத்திய பாகத்தையே தாக்கின.

பலர் மிக நல்லவையும் மிகத் தூயவவையும் ஆன எதையும் பழித்து விடலாம் என்று கூறுகின்றனர். ஆனல் உண்மையிலே எவனொருவன் உண்மையைப்பழிக்கின்றானே அவன் தன்னைத்தானே பழித்துக் கொள்பவன் ஆவான். அவன் தன் நகைப்பே எள்ளும் தனி மூடனாவான்.

## ஐந்தாவது அத்தியாயம்.

மனிதனது மனம் பல துறைகளையுடைத்து. உண்மை என்பதை ஒவ்வொரு முறையிலும், எல்லாப் புலன்களாலும் மனிதன் பரீக்ஷிக்கவேண்டும். அவ்வாறு பரீக்ஷிக்கவும் அவன் அவாவுகின்றான்.

"உண்மைப் பிரசன்னம் (Real Presence) என்னும் ஆபாசத்தைப் போக்குதலுக்கு, வசவு, எள்ளி நகைத்தல் முதலியவையன்றி வேறு வழியில்லை. தெய்வீகப் பண்டம் ஒன்றைத் தின்றவுடன் மும்மூர்த்திகளையும் விழுங்கி விட்டதாக நம்பும் மூடனையும், திராக்ஷ ரசத்தின் துளியொன்றைக் குடித்த புரோகிதன் நித்திய கடவுளையே ஜீரணம் பண்ணிவிட்டதாக நம்பும் அறிவற்றவனையும் திருப்பும் வழி அதனினும் வேறென்னே? படைத்த பண்டத்தை எலி தின்றால் பாவம் நேருமென்று அதைப் பத்திரப்படுத்தி வைக்கும் முட்டாளுடன் மற்றெவ்வாறு தான் தர்க்கித்தல் இயலும்.

முப்பது, நாற்பது அருங்குழவிகள், சொட்டைத் தலைச் சாமியார் ஒருவரைப் பார்த்து நகைத்தன என்னும் குற்றத்திற்காக அவர்களைத் துண்டு துண்டாய்க் கிழித் தெறிய இரண்டு கரடிகளை ஏவினர். கருணை ததும்பும் ஓர் கடவுள் என்று நம்பும் கசடர்களுடன் தர்கமுறை கையாண்டால் விளையும் பயன் என்னே?

இத்தகைய மாக்களுக்குப் பதில் இயம்புவது தான் எப்படி? தங்கள் மோசமான நிலையை அவர்களுக்கு உணர்த்துதல் எவ்வாறு? கேலிக் கூற்றின் கூறிய அம்பு கள் அவர்களது உடற்றசையில் தைத்தால் ஒழிய அவர் களுக்குச் சுய அறிவே ஏற்படாது.

இவ்வாறு வால்டையர் சிந்தித்ததற்காக அவரைக் கேலிக்காரன் எனக் குறை கூறினர். அவர் எவற்றை யெல்லாம் கேலி செய்தார்? தன் குடிகளின் வருத்தத் தைச் சட்டைபண்ணுதும், தன் ஆட்சி முறையில் நீதியில் லாமலும் வந்த மன்னர்கள் தமை, அவர் கேலி செய்தார். பட்டம் பெற்ற முட்டாள்களைப் பார்த்துப் பார்த்து அவர் சிரித்ததுண்டு. நீதிஸ்தலங்களின் அழுக்குத் தன்மை களையும், அநீதியையும், நீதிபதிகளின் இழி தன்மையை யும், கொடுங்கோன்மையையும், கொடூரங்களையும் அவர் கண்டு கோபச்சிரிப்பு கொண்டதுண்டு. ஆபாசமான கொடூரச் சட்டங்களையும், அநாகரீகப் பழக்க வழக்கங் களையும் அகற்றும் விதத்தான் நகைத்ததுண்டு அவ் வால்டையர். கார்டினல்களையும், போப்பையும், பிஷப்பு களையும், புரோகிதர்களையும், கணக்கில்லாத மற்ற ஆஷா டபூதிகளையும் கண்டு அவர் நகைத்ததுண்டு. தமது

நூல்களைப் பொய் கொண்டு நிறைத்த சரித்திர ஆசிரியரையும், மூட நம்பிக்கைகளை முழுதும் காப்பாற்றி வந்த தத்துவ சாஸ்திரிகளையும் வால்டையர் கேலி பண்ணுவது வழக்கம். சுதந்திரத்தை வெறுக்கும் கசடர்களையும், மக்களை நலிவுறுத்தும் மாக்களையும் அவர் கேலி செய்தார். பொதுவாகவே, வால்டையர் தன் காலத்தில் தாண்டவமாடிய கர்வம், கொடுமை, அகம்பாவம், கடையர் குணம் முதலிய யாவற்றையுமே கேலி செய்து துறத்த முயன்றார்.

ஆஷாடபூதித் தனம் பிறர் நகைத்தலைக் கண்டு நாணுதல் ஆகியவை எல்லாக் காலங்களிலும் இயல்பு. ஹாஸ்யச் சொற்கள் ஆபாசக் குணங்கள் ஆகியவைகளை அவர் விரும்புவதே கிடையாது. கூரறிவுக் கூற்றுக்கும், முட்டாள் தனத்திற்கும் கூறமுடியாத பகமை எனினும் நகைத்தலில் வால்டையர் இணையற்றவர். ஆபாசத்தையும், ஆகாதனவற்றையும் அவர் நகைத்தார். புராணக் கதைகளையும், பூர்வீக அர்புதங்களையும், குருமார்கள் கொண்டிருந்த பொய் வாழ்வையும், பொய்க் கூற்றையும் அவர் கேலி செய்து வந்தார். பாசங்கும், துறவறமும் பலராலும் நம்பி வரப்படுவதைக் கண்டார். அறிவற்றப் பலர் தந்திரமும், கொடுமையும் கொண்ட சிலரால் ஆளப்பட்டு வருவதையும் அவர் அறிந்தார். மூட நம்பிக்கையில் மூழ்கிக் கிடந்த சரித்திர ஆசிரியர்கள் தம் சரித்திரம் முழுவதிலும் நடக்கமுடியாத செய்திகளை நிறப்புவதையும், அவற்றை விஞ்ஞானிகள் யாவரும் "என்று சொல்லப்படுகின்றது" என்றே கூறி வருவதையும் அவர் கண்டு வந்தார்.

ஆகக்கூடிய விஷயங்களை அறியும் ஆற்றல் அவருக்கு உண்டு. உலக வியவகாரங்களையும், சாதாரணமா

கக் காணும் சம்பவங்களேயும் அவர் நன்கறிந்திருந்தனர். ஆகையால் அவர் தன்காலத்தில் மக்களிடம் காணப்பட்ட விபரீத, வேறுபட்ட மனக் காட்சியைக்கண்டு நகைத் தார். ஆண்களேக் காட்டிலும் பெண்களுக்குப் பல் அதிகம் என அரிஸ்டாட்டில் என்பவர் கூறியிருந்தார். இதே கொள்கையைப் பதினெட்டாம் நூற்ருண்டு முழுவதும் இருந்த விஞ்ஞானிகள் திருப்பித் திருப்பிக் கூறிக்கொண்டே வந்தனர். ஆனல் வால்டையர் பெண்களின் பல் வரிசையை எண்ணிப் பார்த்து அக்கூற்று பொய்யென உணர்ந்தார். ஏனைய மக்கள் "அவ்வாறு சொல்லப்படுகிறது" என்று திருப்திப் பட்டு வந்தனர். அநேக ஆண்டுகளாய் வால்டையர் தன் சுற்றுப் புரங்களின் நிலைமையும், உலகமுழுதும் உலவி வந்த கொடுங்கோன்மையும், கொடூரமும் அவர் மனத்தை கவலையுறச் செய்யினும், கடவுள் நம்பிக்கை கொண்டவராகத் தான் இருந்து வந்தார். "இயற்கை மதம்" என்பதில் அவருக்கு நம்பிக்கையுண்டு. தன் காலத்திய மதம் அவரது "கடவுளுக்கு" மானபங்கம் உண்டுபண்ணும் தன்மையதாய் இருந்த காரணத்தால் அதை அவர் தாக்கிவந்தார். அவருடைய "கடவுள்" தந்தையின் தயை, நீதியின் உறையுள், அறிவு இரக்கம், என்பவை போன்ற நற்குணங்கள் நிறையப் பெற்றிருக்க, கத்தோலிக்கரது "கடவுள்" கொடுமையும், மடமையும் கொண்ட குரூர அரக்கனுக இருந்து வந்தது. தனது வசமிருந்த ஆயுதங்கள் அனைத்தையும் கொண்டு அவர் "பைபிளே"த் தாக்கிவந்தார். அதனுடைய பூலோக சாஸ்திரத்தையும், வான சாஸ்திரத்தையும், நீதித் தன்மையையும், சட்டங்களேயும், பழக்கங்களேயும் அதனுடைய ஆபாசமான பயனற்ற அற்புதங்களேயும், அறிவற்ற

ஆச்சரிய சம்பவங்களையும், அதனுடைய வியவகார ஞானமின்மையையும், பைத்தியக்கார ஜோசியங்களையும், கொடூரமான பயமுறுத்தல்களையும், அதனுடைய அளவு கடந்த ஆசை காட்டும் வார்த்தைகளையும் ஆகிய பலவற்றை வால்டையர் பலமாகத் தாக்கினர்.

ஆனல் அவர், உலகத்திற்கு மழையையும், ஒளியையும், மலர் வர்க்கத்தையும், மனிதர்க் குணவையும், சந்தோஷத்தையும், சரீர சுகத்தையும், இளமையையும், எழிலையும், இனிதின் வழங்கும் இயற்கைக் கடவுளைப் பாராட்டித்தான் வந்தார்.

ஒவ்வொரு புறமிருந்தும் தான் தாக்கப்படவே, வால்டையர் தனது அறிவு, தர்க்கமுறை, பகுத்தறிவு, வெறுப்பு, அசட்டுத் தனம், நகைப்பு, பரிதாப குணம், கோபம் முதலிய ஆயுதங்களைக் கொண்டு பலரையும் எதிர்த்துப் போராடி வந்தார். அவரது பல முறைகளிலும் மன்னிப்புக் கேட்டுக்கொள்ளும் முறை பிறரைக் கோபப்படுத்தும் பாற்றதாகும். அவர் தான் சொன்னது தவறு என்று கூறுவாரேல் அது அவர் முன்பு கூறியுள்ள சொற்களைக் காட்டிலும் ஆயிரமடங்கு கொடுமையுடையதாயிருக்கும். அதைவிட அதிகம் கூறிவிட்டு அதற்கு முன்பு சொன்னது பொய் என்று சொல்லுவார். புகழுரை கூறுபவரைப் போலவே அவர் பிறரைப் புன்மைப்படுத்தி பொடியாக்கி விடுவார். அவருடைய பாராட்டுச் சொற்களிலும் பாஷாணமே நிறைந்திருந்தது. அவர் பின்னடைபவரைப்போலவே நடித்துப் பெரிய காரியங்களைச் சாதிப்பதிலும், தான் கூறியவற்றையே மறுப்பவரைப்போல்

நடித்து அதனினும் அதிகமாக விஷயங்களைச் சொல்லு வதிலும் அதிக சமர்த்தர்.

தான் கஷ்டப்படும் காட்சியையும், நெருப்பில் வேகும் காட்சியையும் கண்டுகளிக்கும் திருப்தியை அவர் புரோகிதருக்கு அளிக்க விரும்பவில்லை. இதைப்பற்றி அவர் எழுதினதாவது "நான் பின்வாங்கவேண்டுமென்று அவர்கள் கேட்கின்றார்கள். அவ்வாறே நான் மகிழ்ச்சியுடன் செய்கிறேன், அதன்படிக்கு பாஸ்கல் (Pascal) என்பவர் எப்போதும் தவறற்றவர் என்றும், அர்ச். லூக்கரும், அர்ச். மார்க்கும் ஒருவருக்கொருவர் மாறுபடுவாரேல் அது அவற்றை சரிவர உணரக்கூடியவர்களுக்கு மதத்தின் உண்மைக்குச் சான்றென விளங்கும் என்றும், மதத்தை உண்மைப்படுத்த மற்றொரு சான்று அதன் விளக்கமுடியாத தன்மையே என்றும், நான் பகருவேன். மற்றும் எல்லாப் புரோகிதரும் பற்றற்றவர் என்றும், இனிய குணத்தவர் என்றும் கூறுகிறேன். "ஜெசூவிட்ஸ்" என்னும் பாதிரிமார்கள் எல்லாம் யோக்கியமானவர்கள் என்றும், சந்யாசிகள் அனைவரும் கர்வமும், சூழ்ச்சியும் அற்றவர்கள்; அவர்கள்மீது வீசும் வாசனை பரிமளமானது என்றும்; பரிசோதனைத் திட்டம் (Inquisition) என்பது மானுஷீகத்தன்மை, பிறர் நலியாமை என்பவற்றின் வெற்றியின் அறிகுறியென்றும் நான் கூற முன் வருவேன். இதேபோன்று ஒருவருக்கும் ஒரு தீங்கும் செய்யாத என்னைமட்டும் அமைதியோடு வாழ அவர்கள் விடுவார்களேல் அவர்கள் விரும்பும் சகலவற்றையும் நான் சரியென்றும் ஒப்புக்கொள்ளுகிறேன்."

வால்டையர் தனது அரிய வாழ்வின் பெரும்பாகத்தை நலிவுறுத்தப்பட்டவருக்கு நல்லுதவி புரிவதிலும், அனாதைகளுக்கு அபயம் அளிப்பதிலும், குரூரத்தீர்ப்புகளை அகற்றுவதிலும், அப்பாவிகளையெல்லாம் பாதுகாப்பதிலும், பிரான்சு தேசச் சட்டங்களைச் சீர் திருத்துவதிலும், சித்திரவதைக் கொடுமைகளைச் சிதைத்தெறிந்துவிடுவதிலும், புரோகிதரது உள்ளத்தைச் சாந்தப்படுத்துவதிலும், நீதிபதிகளுக்கு அறிவூட்டுவதிலும், நிலமன்னர் தமக்குக் கல்வியளிப்பதிலும்,தேச மக்களை நாகரீகப்படுத்துவதிலும், மக்கள் மனத்தினின்று போர் வேட்கையைப் போக்குவதிலுமே கழித்துவந்தார்.

நான் அளவுக்கு மீறிக்கூறிவிட்டதாக நீங்கள் நினைக்கலாம். இவரை ஆகாய அளவிற்குப் புகழ்ந்துவிட்டேன் எனவும் நீங்கள் கருதலாம், ஆனால் ஜர்மனி தேசத்து மகான் கீதே (Gcothe) என்பவர் இவரைப்பற்றிக் கூறியதாவது:- "நீங்கள் உலத்திலே காணவேண்டுவது, ஆழ்ந்த கருத்தும், அளவுகடந்த பேரறிவும், சிந்தனை சீறும், நல்லுணர்ச்சியும், செரிந்த பகுத்தறிவும், பொருளை அறிந்துணரும் தன்மையும், மேம்பட்ட எண்ணமும், மேலான தத்துவமும், தானே இயற்றும் சக்தியும், தண்ணளியின் இயற்கை அறிவும், புத்திசாலித்தனமும் பூரிக்கும் புந்தியும், உண்மை நாடும் உணர்வும், ஒவ்வொரு பொருளையும் அனுசரித்தலும், கலையின் எழிலும், குறி கொண்ட கூற்றும், மிகப்பல விஷயங்களும், வேறுபட்ட பல விஷயங்களும், மாண்பின் அன்பும், மனத்தினது செழிப்பும், சீரும் சிறப்பும், வாஞ்சையும், மனவளனும், பல பொருளைக் கொள்ளத்தகும் மனோபலனும், விரி

ந்த ஞானமும், செறிந்த பொருள் அறிவும், எழில் மிகுந்த குரலும், இன்பந்தரும் மொழிகளும், தவருத நேர்மையும், மாசுதவிர் குணமும், களங்கமற்ற சொல்லும், கருத்துருக்கும் கண்ணியச் சொல்லும், பிரசாரத் தோற்றமும், பிறரை வெல்லும் பேச்சும், விரைவும், வியப்புறும் மகிழ்ச்சி நிறைவும், சகலபுவனச் சஞ்சார மனமும், வானினும் ஓங்கிய வளப்பமும், குறைவிலா குண நிறைவும் ஆயின. இவையனைத்துக்கும் வால்டையரிடம் தான் செல்லவேண்டும்.''

ஸ்காத்லாந்து தேசத்தில் பிறந்த கார்லைல் என்பவர் கரடியைப்போல் உறுமிக்கொண்டு ஆஷாடபூதித் தனத்தைக் கண்டித்து வருவதாகக் கூறிக்கொண்டு தனக்குப் போட்டி எங்கும் இல்லாதபடி செய்துகொள்ளக் கூடியவர். அவரும் கூட வால்டையர் தான் தற்கால மூட நம்பிக்கைகளை வேரோடு களைந்தவர் என்று ஒப்புக்கொண்டிருக்கின்றார்.

தன் காலத்திய மூட நம்பிக்கைகளைக் களைந்தெறிவது ஒவ்வொரு மனிதனுடைய கடமையாகும். எனினும் தம்மைப் பொருத்தமட்டில் மூட நம்பிக்கைக் கொள்கைகளை தம் முழு மனதோடு வெறுக்கவும், மறுக்கவும் செய்யும் ஆயிரக் கணக்கான ஆண்களும், பெண்களுமாகிய தாய் தந்தையர்கள் நமது குழந்தைகளுக்கு மட்டும் அப்பொய்க் கல்வியைப் போதிக்க விட்டுவிடுகின்றனர்.

நித்திய நரகம் என்னும் எண்ணமாகிய விஷம் அவர்களது சிந்தனையைச் சீர்கெடுத்துவிடுகின்றது. தங்களது பிள்ளைகளது மனத்தில் பீதியையும், வருத்தத்தை

யும் பயக்கக்கூடிய அநாகரீக வித்துக்களை செருக்கும், மட்டையும் செறிந்த மதக்குருக்களும், தைரியமற்ற அறியாமை மிக்க ஆசிரியர்களும் விதைக்குமாறு அப் பெற்றோர்கள் விட்டுவிடுகின்றனர். ஒரு மனிதனுக்குச் சுதந்திரத்தோடும், பயமற்றும் வாழும் வாழ்வினும் சிறந்தது வேறொன்றும் இல்லை. இறத்தல் குணமுடைய சுதந்திர மனிதனின் வாழ்வே என்றும் அழிவிலா அடிமையின் வாழ்வினும் தலை சிறந்தது ஆகும். தாய் தந்தையர்கள், தமது பிள்ளைகளைப் பயத்தினின்றும் விடுவிக்க பிரயத்தனம் மிகச் செய்யவேண்டும். தமது பிள்ளைகளுக்கு ஐயுறவும், பரீக்ஷிக்கவும், ஆராயவும் கற்பிக்கவேண்டும். பழங்காலத்தில் ஹெர்கியுலிஸ் என்னும் குழவியின் தொட்டிலருகில் அரவு ஒன்று சதா ஊர்ந்துகொண்டிருந்தது போல, தங்களது ஒவ்வொரு குழந்தையின் தொட்டிலருகிலும் மூட நம்பிக்கை என்னும் பாம்பு சூழ்ந்துகொண்டே இருக்கிறதென்பதை ஒவ்வொரு பெற்றோரும் உணர்தல் வேண்டும்.

அக்காலத்திலே கடவுள் நம்பிக்கை கொண்டவர்கள் அனைவரும், இயற்கையமைப்பு கொடுமைக் குணத்தன்று என்று பாசாங்கு செய்துவந்தனர். மற்றும், மேலான ஜீவன்களுக்காகக் கீழ் ஜீவன்கள் தியாகம் செய்யப்படுகின்றன, என்றும், ஒரு ஜீவன் மற்றொன்றையும், ஒரு மிருகம் மற்றொன்றையும், தின்று வந்தாலும், மனிதன் எல்லாவற்றிற்கும் அரசனாக இருந்துவந்தாலும் எப்போதும் மேலானவைகள் கீழானவைகளைத் தின்று பிழைக்கின்றன என்றும் கூறிவந்தார்கள். ஆகவே, ஒரு மேலான ஜீவன் பிழைக்கும் பொருட்டு ஒரு கீழான ஜீவன்

சொல்லப்பட்டதை இத்தகைய தர்க்கமுறை பலரைத் திருப்தி படுத்துவதாயிற்று. இருந்தாலும் ஆயிரக்கண க்கான மக்கள், கீழான ஜன்மங்கள் ஏன் கொல்லப்பட வேண்டும் எனவும், துன்பத்திலிருந்து ஏன் சுகம் பிறக்கவேண்டும் எனவும் தெரியாமலே இருந்து வந்தனர். ஆனல் பூதக் கண்ணுடியைக் கண்டுபிடித்து மிக நுட்பமான பொருள்களையும், மிகப் பெரிய வஸ்துக்களையும் காண ஆரம்பத்திலிருந்து, நமது மூதாதையர்கள் மேலான ஜீவன்களுக்காகவே கீழானவைகள் இருந்தன என்று கொண்டுவந்த கொள்கை தவறு என மனிதன் உணரவாரம்பித்துவிட்டான்.

நாம் இப்போது கண் கூடாகக் காணுவதெல்லாம் என்னவென்றுல் கண்களால் காணப்படக்கூடிய பிராணிகள் அவ்வளவும் தம்மினும் கீழ்தரமான பிராணிகளால் அழிக்கப்பட்டு வருகின்றன என்பதேயாகும். மற்றும் மனிதனும் கூட மிக நுட்பமான அணுவினும் சிறிய பூச்சிகளால் அரிக்கப்பட்டும், அழிக்கப்பட்டும் வருகின்றன. மஞ்சட் காய்ச்சல் பூச்சி என்பவை உயிர் வாழும் பொருட்டு கோடிக் கணக்கான மாந்தர்கள் உயிர் நீத்து வருகின்றுர்கள். காலராவை உண்டாக்கும் மிகச் சிறிய கிருமிகள் தேசங்கள் பலவற்றைச் சிதைத்து வருகின்றன. மற்றும் சில பிராணிகள் மனிதனது இருதயத்தைத் தின்று ஜீவித்து வருகின்றன. வேறு சில ஜந்துக்கள் மனிதனது சுவாசப் பைகளையே விரும்புகின்றன. இன்னும சில பூச்சிகள் மனிதனின் கண் பார்வை நரம்பைப் புசிக்கும் நுண்ணிய ருசியை உடையனவாய் ஓர் கண்ணைத் தின்று ஒழித்தவுடன் மூக்குத் துவாரத்தின்

குறுக்கே புகுந்து மற்றொரு கண்ணை அரிக்க எத்தனிக்கும் அவ்வளவு அறிவுடையனவாயும் உள்ளனவென்றும் நாம் பார்த்து வருகிறோம். முதன் முதலிலே மேலான ஜீவன்களுக்காக கீழான ஜந்துக்கள் சம்கரிக்கப்படுவதாக கண்ட நாம் சற்று ஆராய்ந்தவுடனே மிகவும் கீழ்ப்பட்ட ஜீவன்களுக்காக அதி உன்னதப் பிராணிகளும் அழிக்கப் படுகின்றனவென்று காண இயலுகின்றது.

அலெக்ஸாண்டர் போப் என்னும் ஆங்கிலப் புலவர் "அரை குறைத்தீங்கெலாம் அகில உலகின் நலமே" என்று பாடியுள்ள நன் நம்பிக்கையை நமது வால்டையர் நெடு நாள் மேற்கொண்டிருந்தார். இத்தகைய மாற்றம் அதிர்ஷ்டசாலிகளுக்கேற்ற தத்துவம் தான் பொருள் படைத்தவர்க்குப்பொருந்தியது தான். இது புரோகிதருக்கும், மன்னர்கட்கும் பூரிப்பையுண்டாக்குவது தான். செவியில் கேட்கவும் சீரியதாகத் தான் உள்ளது. மற்றும் பிச்சைக்காரன்மீது எறிவதற்கேற்ற பெரிய கல்போன்றும் அது உதவுகின்றது. அது பிறருக்கு விளையும் பெருங் கேடுகளைப் பொருமையோடு நாம் தாங்கிக் கொள்ளுமாறு உதவி புரிகின்றது.

ஆனால் அந்தக் கூற்று, அவஸ்தைப்படும் அருதிகட்கும், கந்தையைக் கட்டிக் கஷ்டப்படுபவருக்கும், தேச பக்திக்காகச் சிறையில் உறைபவர்கட்கும், போக்கிலியாகிய யோக்கியர்களுக்கும், பிரஷ்டம் செய்யப்பட்ட பெருங் குணத்தவருக்கும் ஆறுதல் அளிக்கும் அருந்தத்துவம் அன்று. ஒரு கூட்டத்தினரும், ஒரு சிலருமேயான அதிர்ஷ்டசாலிகளுக்கேற்ற தத்துவமாகும் அக்

கூற்று. ஆனால் அவர்களையும் துர் அதிர்ஷ்டம் வந்து துறத்த முற்படின் அந்தத் தத்துவமும் போனவிடந் தெரியாமல் போய் மறைந்தொழியும்.

லிஸ்பான் என்னும் ஊரிலே 1755-வதாண்டு ஒரு பூகம்பம் உண்டாயிற்று. இந்த பயங்கர சம்பவத்தால் கிளம்பின பிரச்சினைகள்பல, நல் நம்பிக்கை கொண்டிருந்த பலர் இக்கேள்வியைக் கேட்கும்படி நேர்ந்தது. "என் கடவுள் அது போது என்ன செய்துகொண்டிருந்தார்? ஆயிரக்கணக்கான அவரது சேய்கள் முழங்கால் மண்டி போட்டு அவர் பாதத்தை முத்தம் கொடுத்து வந்தனம் கூறும் அந்த நேரத்திலும் கூடவா அகில உலகின் அரும் பிதா அவர்களைத் தவிடு பொடியாக்கி இருக்கவேண்டும்.

இக் கொடூர சம்பவத்தின் பயன் என்ன. பூகம்பம் என்பது ஒன்று உண்டாகியே தீரவேண்டும் என்றிருந்தால், யாருமில்லாக் காட்டிலும், அகண்ட கடல் பரப்பிலும் ஏன் அது ஏற்பட்டிருக்கக் கூடாது" இந்த பயங்கரமான விஷயம் வால்டையரின் தெய்வ ஞானத்தைச் சற்று தாக்கியது. உடனே அவர், இது உலகங்களிலெல்லாம் உத்தமமான உலகம் அல்ல என்று தெளிவுற்றார். கெடுதல் என்பது இங்கும், இப்பொழுதும் மற்றெக்காலத்தும் ஒன்றேதான் என்றும் வால்டையர் அறியலுற்றார்.

ஆஸ்திகர்கள் வாய் அடங்கியிருந்தனர். பூகம்பம் கடவுள் இல்லையென்பதை புலப்படுத்தியது.

———)o(———

## ஆறாவது அத்தியாயம்.

டூலூஸ் என்பது ஓர் விசேஷமான ஸ்தலம். பண்டைய பிரசாதங்கள் மலிந்த நகரம் அது. அந்நகர மக்கள் மரப் பாங்குச்சியின் மடமையை உடையவர்களாயிருந்தார்கள் எனினும், அவர்களிடம் காலஞ் சென்ற ஏழு நாயன்மார் களின் உலர்ந்த சரீரங்களும், ஹீராடு என்பவர் வெட் டிய குழவிகளின் எலும்புத்துண்டுகளும், கன்னிமேரி அணிந்திருந்த கவின்தரு ஆடையின் ஒரு பகுதியும், மடமை முற்றிய மதியீனர்களாகிய பல நாயன்மார்களின் மண்டையோடுகளும், எலும்புக் கூடுகளும் ஆன பல பொக்கிஷங்கள் நிறையப்பெற்றிருந்தன.

இந் நகரத்தில் அதன் மக்கள் வருடந்தோறும் இர ண்டு விழாக்கள் இன்புற நடத்திவந்தனர். அவையாவன:- ஹ்யூஜினட் என்னும் புராட்டெஸ்டாண்டர்களை நாட்டை விட்டுத் துரத்திய விழாவொன்றும் பர்த்லாம்யூ நாளில் அவர்களைக் கொலை செய்த விழாவொன்றும் ஆகும். இவ் விரு விழாவையும் மகிழ்வுடன் கொண்டாட அந்த டூலூஸ் நகர மக்களை மதமானது கட்டாயப்படுத்தியும் அறிவுறுத்தியும் வந்தது.

இந்த நரிக்கூட்டங்களுக்கும், புலி கோஷ்டிகட்கும் மத்தியில் ஒரு சில புராட்டஸ்டெண்டு மதமக்கள் ஒருசில ரேயாகையால் சற்று சமாதானமாய்க் குடியிருந்து வந் தனர். இத்தகைய புராட்டஸ்டெண்டுகளுள் ஜீன் கலாஸ் என்னும் சிறு வியாபாரி ஒருவனிருந்தான். அவன் யா தொரு பாவமும் அறியாத நற்குணத்தவனாய் நாற்பது

வருட காலம் தன் தொழிலை யாற்றிவந்தவன். அவன் யோக்கியமும், கருணையும், யாவருக்கும் அனுசரணையும் உடையவன் அவனுக்கும், அவன் மனைவிக்கும் நான்கு புத்திரர்களும், இரண்டு புதல்விகளும் உண்டு. அவர்களில் ஒரு புதல்வன் கத்தோலிக்க மதத்தை அனுஷ்டிக்கலானான். மூத்த புதல்வனான மார்க்கு ஆண்டாயின் என்பவன் தன் தகப்பனின் தொழிலை வெறுத்து சட்டம் பயிலலானான். ஆனால் அவனும் கத்தோலிக்க மதத்தை தழுவினாலன்றி சட்டத் தொழில் இயற்றுதற்கு அருகதை இல்லாதவனாயிருந்தான். அவன் தான் புராட்டஸ்டெண்டு மதத்தினன் என்னும் விஷயத்தை மறைத்துத் தன் தொழிலுக்கு லைசென்ஸ் வாங்க முயன்றான். அது கண்டுபிடிக்கப் படவே அவன் மனக் கவலையில் ஆழ்ந்தான். இறுதியாகத் துயரத்தைத் தாங்கவொண்ணாமல் ஒரு நாள் அவன் தனது தந்தையின் கடையில் தற்கொலை செய்துகொண்டு இறந்தான்.

ஆனால் டூலூஸ் நகரத்தின் மதவெறி கொண்ட மாக்கள் அவனது பெற்றோர்களே அவன் கத்தோலிக்க மதத்தைத் தழுவாமல் தடுப்பதற்காக அவனைக்கொலை செய்துவிட்டனர் என்னும் பொய்க்கதையைப் பரவச் செய்தனர். இந்தக் குற்றத்திற்காக தகப்பன், தாய், ஒரு புதல்வன், ஒரு வேலைக்காரி ஒரு விருந்தாளி ஆகியவர்கள் உடனே கைது செய்யப்பட்டனர். இறந்துபட்ட மகன் ஒரு பெரிய மதத்தியாகி என்று கருதிக் கத்தோலிக்கர்கள் அவனது பிணத்தைத் தாம் கைப்பற்றிக் கொண்டனர். இது நடந்தது 1761-வது வருடம். அதன் பின்னர் விசாரணை என்று கருதப்படும் ஒரு சடங்கும் நடந்தது. கே

ள்விச் செய்தியைத் தவிர கிஞ்சிற்றேனும் இக்குற்றத்திற்குச் சாக்ஷியம் என்பதே கிடையாது. மற்றெல்லா விஷயங்களுக்கும் குற்றம் சாட்டப்பட்டவருக்குச் சாதகமாகவே இருந்தன. இவர்கள் அனைவரும் சேர்ந்துங் கூட அச்செயலை செய்திருக்கவே முடியாது.

அப்படியிருந்தும் ஜீன் கலாஸ் என்பவனைச் சித்திரவதைத் தண்டனைக்கும் சக்கரத்தின் மேல் சாகும்படிக்கும் ஆக்ஞாபித்தனர். இது நடந்தது 1762-வது வருடம் மார்ச்சு மாதம் 9-ந் தேதி. இந்த தண்டனை அடுத்த நாள் நிறைவேற்றப்பட வேண்டியது. 10-ந் தேதி காலையில் தகப்பனைச்சித்திரவதைக் கூடத்திற்கு அழைத்துச் சென்றனர். கொலைஞர்கள் அனைவரும் நீதி மன்றத்தின் தண்டனை விதியை நிறைவேற்றி வைப்பதாகப் பிரமாணம் செய்திருந்தனர்.

அவனது மணிக் கட்டுகள் இரண்டும் தரைமட்டத்திலிருந்து நான்கடி உயரமுள்ள கற் சுவற்றிலுள்ள இருப்பு வளையத்தில் இறுக்கிக் கட்டப்பட்டன அவனது பாதங்களிரண்டும் தரையிலுள்ள மற்றொரு வளையத்தில் அழுத்தி மாட்டப்பட்டன. அதன்பின் அக்கொலைஞர்கள் கயிற்றையும், சங்கிலியையும் அழுத்திக் குறுக்கவே ஜீன் காலாஸின் கைமுண்டு, கால்முண்டுகள் கரகரவென நெருக்கிக் கசக்கப்பட்டு நிர்மூலமாக்கப்பட்டன. இந்தக் குரூரமான சமயததில் அவனைப் பல கேள்விகளும் கேட்டார்கள். அவன் தான் ஒன்றுமறியாத நிரபராதியே என நிச்சயமாய்க் கூறினான். உடனே அவ்விருப்புச் சங்கிலிகள் இன்னும் நெருக்கப்பட்டன. அவனது உயிர் மட்டும் சற்று ஊசலாடிக்கொண்டிருந்தது. எனினும்

அவன் உறுதியாகவே இருந்தான். இதற்குத்தான் சாதாரணக் கேள்வி முறை என்று பெயர்.

மீண்டும் நீதிபதிகள் அவன் குற்றத்தை ஒப்புக்கொள்ளுமாறு ஆக்ஞாபித்தனர். மீண்டும் அவன் தான் ஒப்புக்கொள்ள வேண்டியது ஒன்றுமே இல்லையென மறுத்தான், அதன்பின் வந்தது 'தீவிரக் கேள்வி முறை.'

ஜீன் கலாஸின் வாயில் மூன்று படி தண்ணீர் நிறைந்த மூங்கில் குழாய் ஒன்று வைக்கப்பட்டது. இப்படியே முப்பது படி ஜலம் அவன் வயிற்றிற்குள் முறட்டுத்தனமாய்ச் செலுத்தப்பட்டது. அவன் அடைந்த துன்பமோ அளவிடற்கில்லாதது எனினும் ஜீன் கலாஸ் அந்தக் குற்றத்தை மறுத்தான். அதன் பின் அவனை ஒரு ஏணியில் வைத்து கொலைக் களத்திற்குக் கொண்டு சென்றனர். தூக்குமேடையிலிருந்த மரச் சிலுவையொன்றில் அவன் உடல் மாட்டப்பட்டது. கொலைஞன் ஒரு பெரிய இருப்புக் கட்டப்பாறையை எடுத்து ஜீன் கலாஸின் கைக் கணுக்கால் கணுக்களில் இரண்டுபட்டுத் தெறித்தோடும்படியாக இரக்கமின்றிப் பதினேரு அடிகள் இழுக்கினன். அதன்பின் அவன் இறக்கமுடிந்தால் இறந்து கொள்ளட்டும் என்று இரக்கத்தோடு விடப்பட்டான். அதன் பின் ஜீன்கலாஸ் இரண்டு மணி நேரம் உயிர் தரித்திருந்தான். அவ்விரண்டு மணி நேரமும் கடைசிவரை தான் நிரபராதி என்று கூறியே வந்தான். அவன் அதன்பின் அவனது அடிபட்டு ஒடிபட்டதும் இரத்தம் கசிந்து எங்கும் ஓடுவதும், தோலுந் தசையும் கிளிந்து கசிவதுமான தேகம் தீயிலிட்டு வேகவைக்கப்பட்டது.

இவையனைத்தும் டூலூஸ் நகரத்திய மாக்களாகிய அநாகரீகக் கூட்டங்களுக்கு ஓர் அழகிய காட்சியாம் ஒரு அபூர்வ விழாவாம்! இன்னும் உலகில் அமைதியும், மக்களிடம் அன்பும் பெருகவேண்டும் என்று கிறிஸ்து கூறி விராவிடில் இக்கும்பல்கள் என்னென்ன செய்திருக்குமோ தெரியாது.

ஆனால் இதோடு நின்று விடவில்லை. அந்த ஜீன் கலாஸின் குடும்ப சொத்து அனைத்தும் பறிமுதலாக்கப் பட்டது. சிறையிலிருந்த புதல்வனைக் கத்தோலிக்கனாக வேண்டும் என்ற நிபந்தனையின் பேரிலும், வேலைக்காரமாதை கன்னிமார் மடத்துக்கேகவேண்டும் என்ற நிபந்தனையின் பேரிலும் வெளி விட்டார்கள். அவ்விரு புதல்விகளையும் ஒரு கன்னி வடத்தில் அடைத்துவிட்டு, மனமுடைந்து மதியிழந்த அவர்கள் தாயை வேண்டிய இடத்திற்குப் போகும்படி விட்டுவிட்டார்கள்.

இந்த விஷயத்தைப் பற்றி வால்டையர் கேள்விப் பட்டார். உடனே அவரது மனம் நெருப்பிலிட்டப் புழுவைப்போல் துடித்தது. அப்புதல்வர்களுள் ஒருவனைத் தன் வீட்டில் வைத்து வளர்த்து வந்தார். அந்த வழக்கின் சரித்திரமொன்றை அவர் எழுதி முடித்தார். அதை பற்றி மன்னரோடும், அரசியரோடும், மந்திரிகளோடும் வழக்கறிஞரேடும் விசாரணை செய்தார். பணம் வேண்டியபோது பரிவோடளித்தார். இவ்வாறு பல ஆண்டுகட்கு வால்டையர் ஐரோப்பா முழுவதிலும் ஜீன் கலாஸின் குரூர கர்ஜனையின் அதிர்ச்சி பரவும்படி செய்துவந்தார். கடைசியாக நம் வால்டையர் வெற்றியடைந்தார். அக்கொடியத் தீர்ப்பை ரத்து செய்தனர். அந்த ஜீன்

கலாஸ் என்பவர் நிரபராதி என நிலை நிறுத்தப்பட்டது. மற்ற தாய் பிள்ளைகள் இவர்கள் ரக்ஷணைக்காக ஆயிரக் கணக்கான ரூபாய் திரட்டி அளிக்கப்பட்டது. இவை அனைத்தும் நம் வால்டையரின் அரிய தொண்டாகும்.

மற்றொரு சம்பவம். லான் கியுடாக் என்னும் ஓர் ஊரில் சீர்வன் என்னும் ஓர் புராட்டஸ்டெண்டு மதத்தினனும், அவனது மனைவியும், மூன்று புதல்விகளும் வசித்து வந்தனர். அவ்வூர் பிஷப்பின் வீட்டு வேலைக்காரன் அச்சீர்வனின் புதல்வி ஒருவளைக் கத்தோலிக்க மதத்தில் சேர்க்க முயன்றான்.

சட்டத்தின் படி புராட்டஸ்டெண்டு மதத்தினனின் குழந்தைகளின் ஆன்மாவைக் காக்கும் பொருட்டு எந்தக் கத்தோலிக் பிஷப்பும் அக்குழந்தைகளைப் பெற்றோரிடமிருந்து வலியப் பிடுங்கிக் கொண்டு போகலாம். அவ்வாறே அச்சிறிய பெண்ணை எடுத்துப் போய் கன்னிகா மடம் ஒன்றில் இட்டுவைத்தனர். ஆனால் அப்பெண் அவ்விடமிருந்து வெளியேறி தன் வீட்டிற்கு மீண்டும் வந்து விட்டாள். அவளது பரிதாபகரமான சிறிய உடல் முழுதும் பிரம்பின் அடையாளமும், சவுக்கின் குறியும் பதிந்து கிடந்தது. "ஏ, சிறு குழந்தைகளே என்னை அடையும் பொருட்டுத் துன்புறுங்கள்" என்று இயேசு நாதர் கூறவில்லையா? ஆதலால் அது பலிதமடைந்தது போலும்.

இதனால் அக்குழந்தை மனம் கெட்டுப்போய் பீதியடைந்திருந்தது. சில நாட்கள் கழித்து மூன்று மைல் தூரத்திற்கப்பாலிருந்த ஒரு கேணியில் அச்சிறுமியின்

உடல் மிதந்து கொண்டிருந்தது. உடனே அவளது பெற்றோர்கள்தான் அவள் கத்தோலிக்க மார்க்கத்தைத் தழுவாமலிருக்கும் பொருட்டு அவளைக் கொலை செய்து விட்டனர் என்னும் பொய்க் கூக்குரல் எழுப்பப்பட்டது.

மேலே கூறிய ஜீன் கலாஸ் சிறைச்சாலையிலிருக்கும் சமயத்தில் தான் இச்சம்பவம் டூலூஸ் நகரத்திற்குச் சற்று தூரத்தில் நடந்து வந்தது. சீர்வன் என்பவனு க்கு விசாரணையானது தண்டனையில் தான் முடியும் என்று நன்கு தெரிந்தது. எனவே அவர்கள் ஊரை விட்டு ஓட்டம் பிடித்தனர். எனினும் அவர்கள்மீது குற்றஞ் சாட்டப்பட்டு முடிவு கூறப்பட்டது. அவர் களது சொத்துக்கள் பறிமுதல் செய்யப்பட்டன. கொலை ஞர்கள் கையால் பெற்றோர்கள் இறக்கவேண்டுமெனவும், அக்காட்சியை இரு புதல்விகளும் கண்டிருந்து அதன் பின்னர் அவ்விருவரும் நாடு கடத்தப்பட வேண்டுமென வும் தண்டனை விதிக்கப்பட்டது.

அவர்கள் ஓடின காலமோ குளிர்காலம். கலியாண மாயிருந்த ஓர் புதல்வி ஆல்ப்ஸ் மலைப் பனிக் கட்டிகளின் மத்தியில் ஓர் குழவியை ஈன்றாள். அக்குளிரின் அதிக த்தால் அவள் இறந்துபட்டாள். பின் ஸ்விட்ஜர்லாந்து சென்றதும் தகப்பன் முதலியவர்கள் உண்பதற்கின்றித் தவித்தனர்.

அவர்கள் வால்டையரிடம் சென்றனர். அவர் அவ ர்களது கக்ஷியை தம்மேற் கொண்டார். அவர்களுக்கு உணவு உடை, முதலியன தந்து அவர்களைக் காப்பாற்றி

வந்ததுமன்றி ஒன்பது நீண்ட ஆண்டுகளாக அவர்கள் மீது இருந்த பழித்தீர்ப்பை ரத்து செய்யப் படாதபாடு பட்டார் நம் பரம புருஷரான வால்டையர். மன்னர்களி டம் பணத்திற்கும், ரஷ்ய தேசத்து காதரீன் என்னும் ராணியிடமும் இன்னும் அனேகரிடமும் அவர் உதவி யை நாடினர். கடைசியில் அவர் இதைப்பற்றிக் கூறிய தாவது: "1762-வது வருடம் ஜனவரி மாதம் சீர்வன் என்னும் குடும்பத்தார்கள் இரண்டுமணி நேரத்திற்குள் விசாரணை செய்ப்பட்டு தண்டிக்கப்பட்டனர். ஆனல் 1772-ல் பத்து வருடக் கஷ்டங்களுக்கப்புறம் அவர்கள் தம்முரிமையை மீண்டும் அளிக்கப் பெற்றுள்ளனர்."

இதுவும் நம் வால்டையரின் மற்ருெரு தொண்டா கும். இப்படியிருக்க மக்களை விரும்பும் மனிதர்களை கட வுளை வணங்கும் கயவர்கள் வெறுக்கவேண்டியதேனே?

எஸ்பஞசி என்பவன் ஒரு பணக்கார புராட்டஸ் டெண்டு மதத்தினன். 1740-ம் வருடம் அவன் ஒரு புராட்டஸ்டெண்டு ஆசாரியாரைத் தன் வீட்டிற்கு வர வழைத்து இரவு உணவும், இருக்க இடமும் அளித்தான். "நல்ல சாமரித்தன்" என்பவரின் கதையைத் தினந்தோ றும் மக்களுக்குக் கற்பிக்கப்படும் அந்நாட்டில் இது ஒரு பாதகச் செயலேயாகும். இக்குற்றத்திற்காக எஸ்பஞசி என்பவன் விசாரிக்கப்பட்டு, வாழ் நாள் முழுதும் படகு தள்ளும் தண்டனை விதிக்கப்பட்டான். இவ்வாறு அவன் கடுங்காவல் விதிக்கப்பட்டு இருபது வருடம் கட ந்த பின்னர் இவ்விஷயம் வால்டையர் செவிக்கு எட்டி யது. அதன்பின் அவரது விடாமுயற்சியாலும், உழைப் பாலும் அவன் தண்டனை ரத்து செய்யப்பெற்று அவன் மீண்டும் தன் குடும்பத்தை அடையலுற்ருன்.

இதுவும் வால்டையரின் செயலே. இன்னும் இது போன்ற, ஜெனரல் லாலி, ஆங்கில ஜெனரல் பிங், கார் னீலின் மருமகள், ஆடம் என்னும் பாதிரி, ஆசிரியர்கள், விதவைகள், அனுதைகளாகிய பலர் கதைகளையும் அவர் களுக்காக வால்டையர் தியாகம் செய்த பணம், நேரம் செல்வாக்கு முதலியவற்றையும் பற்றிக் கூற இங்கு இடம் போதாது. மற்றொரு விஷயத்தைப்பற்றி மட்டும் கூறி விடுகிறேன்.

1765-வது வருடம் ஆபிவில் என்னும் ஓர் ஊரில் ஒரு பாலத்தின் மேலிருந்த ஒரு மரச்சிலுவை கத்தியால் சற்று சேதுக்கப்பட்டிருந்தது. இது ஒரு மகா பாதகம் அல்லவா? இரத்தமும், சதையும் சேர்ந்த மக்களைக் கா ட்டிலும், ஒன்மன் குறுக்கே ஒன்று பாய்ந்திருக்கும் மரக் குச்சிகள் அவ்வளவு தெய்வத்தன்மையதாகும்! இக்குற் றத்திற்காக இரண்டு வாலிபர்கள் சந்தேகிக்கப் பட்டார் கள். அவர்களுள் ஒருவன் தேசத்தைவிட்டு ஓடிப் போய் பிரஷ்யாவில் பட்டாளத்தில் சேர்ந்துகொண்டான். மற்றவன் அங்கேயே தங்கி விசாரிக்கப்பட்டு தண்டனை யும் விதிக்கப்பட்டான். அதற்கு சாக்ஷியங்களே சற்றும் கிடையாது. இருந்தாலும் இருவரையும் பின்வரும் தண்டனை விதித்தனர்.

முதலிலே, சாதாரணக் கேள்வி முறையையும் தீவி ரக் கேள்வி முறையையும் அனுபவிக்க வேண்டும்.

இரண்டாவது, அவர்களது நாவை அடியோடு குற டுகளால் பிடுங்க வேண்டும்.

மூன்ருவது, அவர்களது வலது கரங்களைக் கோயில் கதவில் வைத்து வெட்டவேண்டும்.

நான்காவது, அவர்களது உடல்கள் குட்டை மரத்தில் இரும்புச் சங்கிலிகளால் கட்டப்பட்டு கொழுந்து விட்டெரியும் அனலால் கொழுத்தப்படவேண்டும். "நாங்கள் பிறர் குற்றத்தை மன்னிப்பதைப் போல எங்கள் குற்றத்தை மன்னிப்பீராக" என்று பிரார்த்தனை கூறுவது பின் பொய்யாகிவிடுமா? இந்தக் கருணை வார்த்தைகளை மனத்தில் தாங்கிய நீதிபதிகள் அவ்வாறு அவர்கள் நன்மைக்காக அவர்களது தலையை வெட்டிவிடலாம் என்று ஆக்ஞாபித்தார்கள். எவ்வளவு இரக்கம்!

இந்தத் தீர்ப்புக்குமேல் பாரிஸ் நகரிலுள்ள இருபத்தைந்து சட்ட வல்லுநர்கள் கூடிய நீதி ஸ்தலத்தின்முன் அப்பீல் செய்யப்பட்டது. அவர்கள் அத்தீர்ப்பை அங்கீகரித்து ஊர்ஜிதப்படுத்தினர். அவ்விதமே அத்தண்டனையும் 1766-வது வருடம் ஜூலை மாதம் முதல் தேதியன்று நிறைவேற்றவும் பட்டது.

இச் செய்தியைக் கேள்வியுற்ற நம் வால்டையர் பிரான்சு தேசத்தை விட்டொழித்துப் பிற நாடு செல்ல நிச்சயித்து விட்டார். இத்தகைய கொடூரச் செயல்கள் நடக்கும் நாட்டைத் திரும்பியும் பார்த்தல் தகாதெனத் திண்ணமாக உறுதி செய்துகொண்டார்.

உடனே அவர் இந்த வழக்கின் விர்த்தாந்தங்களை விளக்கி எழுதி ஒரு பிரசுரம் வெளியிட்டார்.

அதோடின்றி பிரஷியாவுக்கு ஓடின மற்ருெரு வாலிபனை அந்நாட்டு மன்னனுக்கு எழுதி பட்டாளத்திலிருந்து விடுவித்துத் தன் வீட்டில் வைத்திருந்து அவனுக்கு ஒன்னறை வருடமாக பெருங்கணக்கும் என்சினீரிங்கும் கற்பித்து அவனை மகாபிரடரிக்கினது படையில் என்சினீர்களது தலைவனுக்கி மகிழ்வடைந்தார் நம் வால்டையர்.

இத்தகைய மகான் நமது வால்டையர். நசுக்கப்படுவற்கும், திக்கற்றவருக்கும் நற்றேழர் அவரே. மதமும், மன்னரும் நசுக்கிய மக்களனைவரும் பிரார்த்திக்கும் மகாவீசர் என்னும் சக்கரவர்த்தி போன்றிருந்தார். அவர் தன் காலத்திய அறிவையும், இருதயத்தையும் காக்கக் கங்கணம் கட்டி நின்றூர். இப்படியிருந்தும், தம் பகைவரையும் நேசிப்பதாக பாசாங்கு பண்ணும் ஆஷாடபூதிகள் நூற்றைம்பது ஆண்டுகளாகத் தம் அறிவற்றக் கொள்கைகளை வால்டையரின் ஆற்றல் மிக்க ஆராச்சியினின்று காப்பான் வேண்டி அவரைத் தூஷிக்காத விதமில்லை, திட்டாத வார்த்தையில்லை, அவரிடம் காட்டாத துவேஷமும், குரோதமுமில்லை.

வால்டையர் ஓர் பெரிய உன்னத உயரத்திலிருந்து உலகத்தையே சுற்றிப் பார்த்தார். அவரது ஆகாயம் அளவின்றி அகன்றது. அவரிடம் சில குற்றங்கள் இருந்தாலும் அவைகளை அவர் மதாச்சாரியாரிடமிருந்தே கொண்டவர். ஆனல் அவரது குணங்களோவெனின் அவையனைத்தும் அவருடையதேயாகும்.

அவர் சர்வ மக்களின் கல்விக்கும், அறிவின் அபிவிர்த்திக்கும் சாதகமாக இருந்தார். அதனல் அவரைக்

கோவிலாட்கள் வெறுக்கலாயினர். உலகிலுள்ள விஷயங்களனைத்தையும் ஒவ்வொருவருக்கும் கிட்டும்படி செய்ய முயன்றதனால் அவரை ஒவ்வொரு மதக்குருவும் வெறுக்கலானான். ஏதேன் என்னும் நந்தவனத்திலுள்ள இழிவு பொருந்திய மூட நம்பிக்கை என்னும் அரவைத் துரத்தியடித்து ஆதாம் என்பவரின் குழவிகள் அறிவு என்னும் அழகிய பழத்தைப் புசிக்கச் செய்ய முயன்றார் வால்டையர். ஆனால் மடமை என்னும் பொய்க்கனியை விலைக்கு விற்கும் மதாச்சாரியர்கள் இதை மறுத்து அவரை நொந்தனர்.

மக்கள் எல்லோருக்கும் வேண்டிய விஷயங்களை எடுத்துக் கூறும் வித்தகர் அவரே. அவர் காலத்தில் கொள்கைகளைப் பொருத்தமட்டில் அவரினும் பெரிய வழக்கறிஞர் இல்லை என்னலாம். சட்டம் எவ்வாறு இருத்தல் வேண்டுமென்பதையும் எவ்வாறு அது வழங்கப்படவேண்டும் என்பதையும் அவர் நன்குணர்ந்த நிபுணர். அவருக்கு சாக்ஷியத்தின் தத்துவத்தைப் பற்றியும், சந்தேகம், ருசு இவற்றின் வேறுபாட்டையும், நம்பிக்கை விஷய ஞானம் இவற்றின் வித்தியாசத்தைப் பற்றியும் வெகு நன்கு தெரியுமாதலால் அவர், தன் காலத்திய அரசியல் வாதிகளையும், வழக்கறிஞர்களையும் விட அதிகமாக சட்டங்களையும், நீதி ஸ்தலங்களின் துர்ப்பிரயோகங்களையும் திருத்தியமைக்கப்பெரும் பாடு பட்டிருக்கிறார்.

பள்ளியிலிருக்கும்போது அவர் உலகில் தலை சிறந்த உரையாளர் எனத்தகும். ஸிஸரோ என்பவர் நூல்களை

அதிகம் படித்திருந்தார். அவரது வார்த்தைகள் வால்டையரின் மனத்தில் அப்படியே பதிந்து கிடந்தன. ஜாதி வித்தியாசங்கள் பல நிறைந்திருந்த அக்காலத்திலும் கூட அவர் மக்களின் சமத்துவத்தில் மட்டற்ற நம்பிக்கை கொண்டவராக ஆய்விட்டனர்.

அவர் கூறியதாவது:—

"மனிதர்கள் அனைவரும் பிறப்பில் சமமே"

"நற்குணத்தையும் அறிவையும் எந்நாளும் மேச்சுவோமாக"

"மனிதர்கள் எல்லாம் சமமேன்பதை மனதில் என்றும் நிறுத்துவோம்"

வால்டையர் 'அடிமை' என்பதை எவ்வித உருவிலும் வெறுக்கும் உத்தமர். ஒருவன் தன் நிறத்தின் காரணத்தால் மற்றொருவனைக் கொள்ளையடிக்க அருகதையுடையவன் என்பதை அவர் ஒருக்காலும் ஒப்புக்கொண்டிலர். விவசாயிகளுக்கும், உழவர்களுக்கும் விலை மதிப்பிலாத நண்பராகிய வால்டையர் தம்மைப் போன்றே பிறரை நேசிக்கும் மதத்தினரது கோபத்திலிருந்து மிருகங்களையும், மனைவிகளையும், குழந்தைகளையும் பாதுகாக்க மிகப் பாடுபட்டார்.

பிராங்க்லின், ஜெபர்ஸன், தாமஸ் பெயின் என்பவர்களுடைய மனத்திலும் மூளையிலும் விடுதலை என்னும் விதைகளை விதைத்தவர் வால்டையரேயாவர்.

பப்பனடார்ப் என்பவர் அடிமை என்னும் பழக்கம் ஒரு ஒப்பந்தமாகும் எனச் சொல்லி அதை ஆதரித்தார்.

ஆனால் வால்டையர் கூறியதென்ன வென்றால் "அந்த ஒப்பந்த லிகிதத்தைக் காட்டு பார்ப்போம். அதில் அடிமையானவனின் கையொப்பம் இருக்குமேல் நீ கூறுவதை நம்புவேன்" என்பதாகும்.

கடவுளானவர் தகப்பன்மார்களை எல்லாம் நீரில் ஆழ்ந்து இறக்கவைத்துவிட்டு அதன்பின்னர் வந்து அவரது பிள்ளைகளைக் காக்கும் பொருட்டு இறந்தார் என்பது முட்டாள்தனமான கட்டுக்கதை என அவர் எண்ணினார். இவர் எண்ணியது டிடராட்டு என்பவர் கூறியுள்ளதையொத்திருந்தது. அதாவது "கிறிஸ்துவானவர் யூதர்களிடமிருந்து தன்னைக் காப்பாற்றிக்கொள்ள வழியிருந்தும் அதை உபயோகிக்க மறுத்துவிட்டார் என்றால் அவர் தற்கொலை செய்துகொண்டதேயாகும்."

கள்ளிக் குச்சிகளால் மக்களை எறிக்கும் தீயின் சுடர் அழல் மக்கள் மனதிற்கு ஒருக்காலும் உண்மை விளக்கு ஆகாது என்று அவர் உணர்ந்திருந்தார். கொடியவரை வெறுத்து, மதமும் மன்னரும் நசுக்கியவரைக்கண்டு பரிதபித்தார். துரதிர்ஷ்டக்காரருக்குத் துணைவரும், கஷ்டப்படுபவருக்கு உதவியாளரும் ஆயினர். அரசர்களது ஆரவார வாழ்க்கையையும், அர்ச்சகரது ஆஷாடபூதித் தனத்தையும் கண்டு அவர் சிரிக்கலுற்றார். இயற்கையினிடத்தில் நம்பிக்கை கொண்ட அவர் அதிசய அற்புதங்களையும், அர்த்தமற்றவைகளையும் கண்டு தன் மனமாற வெறுத்தார்.

வால்டையர் ஒரு மதாச்சாரியல்ல. அவர் கல்வி கற்றது பாதிரிகளிடம் தான். எனினும் அவர் ஆன்ம

வின் மோக்ஷம் என்பதைப் பற்றிக் கவலைப் பட்டதே இல்லை மத விஷயமான தர்க்கங்களைக் கண்டு அவர் நகைத்தார். கொள்கைகளையும் கேட்டு பரிதபித்தார். மத வெறியாளர் நடத்தையைப் பார்த்து வெறுத்தார். எனவே அவர் மதாச்சாரியினும் மகாப் பெரியவராயிருந்தார்.

அவர் காலத்திய கிறிஸ்துவர்களுள் பலர் தமது மதத்தை தினசரி உபயோகத்திற்காகக் கொண்டிருக்க வில்லை கப்பல்களில் ஆபத்துக் காலத்தில் உபயோகிக்கத் தாங்கிச் செல்லும் சிறிய காப்புத் தோணிகளைப் போல, ஆபத்தும், துன்பமும் நேர்ந்த காலங்களில் உபயோகிக்கவே மதமும் அவர்களிடம் இருந்தது.

மானுஷீகமென்னும் மதத்திலும் நல்ல அருளுடைய செயல்களிலுமே வால்டையர் நம்பிக்கையுடையவராயிருந்தார். பல நூற்றுண்டுகளாகப் புண்ணியம் என்பதை மதமானது மிகக் குரூரமாகவும், வெறுக்கத்தக்கவாறும் காட்டிவந்த காரணத்தால் பாவமுங் கூட அழகு எனக் கூறும்படியாயிருந்தது. எனவே வால்டையர் உபயோகப்படும் பொருள்களின் எழிலையும், மூடக்கொள்கைகளின் வெறுப்புத் தன்மையையும் மக்களுக்கு விளக்கிக் காட்டினர்.

வால்டையர் புலவர்களுள்ளாகிலும், நாடகாசிரியர்களுள்ளாகிலும் மிகப் பெரியவர் அல்லர் என்பது உண்மையே. ஆனல் அவர் தன் காலத்தில் மிகப் பெரிய மனிதரேயாவர். அவர் சுதந்திரத்தின் சுத்தமான தோழர், மூட நம்பிக்கையின் மூர்க்கமான பகைவர் ஆவார்.

மற்ற மக்கள் அனைவரைக் காட்டிலும் வால்டையர் ஒருவரே மூட நம்பிக்கை என்னும் சங்கிலியை உடைத்தெரியவும், அச்சம் என்னும் உருவை மக்கள் அகத்தினின்று ஓட்டவும், கோவிலின் கொடூர அதிகாரத்தைத் தொலைக்கவும் உலகத்திற்குச் சுதந்திரத்தைக் கொடுக்கவும் பாடுபட்டுள்ளார். மிகவும் உண்மையான உன்னதமான பொருளில் அவரே அவர் காலத்திய மக்களுக்குள் மிகவும் உத்தம மதத்தினர் ஆவார்!

---

## ஏழாவது அத்தியாயம்.

---

வால்டையர், இருபதாண்டுகளாக நாகரீக உலகத்திற்கே நாயகம் என விளங்கியிருந்து பின் பாரீஸ் நகரத்திற்கு திரும்பி வந்தார். அவரது வருகை வெற்றி வீரனின் மீள்கை போன்று விளங்கிற்று. மன்னருக்கும் கிட்டரிய மாபெரு பெருமை வாய்ந்த வரவேற்பு வால்டையருக்கு (அகடமி) கழகத்தாரால் அளிக்கப்பட்டது. அவரது 'ஜரீன்' என்னும் நாடகம் நடித்துக் காட்டப்பட்டது. நாடகக் கொட்டகையில் அவ்வமயம் அவருக்கு முடிக்குப் பூங்கொத்துகளும், தேக முழுமைக்கும் நன் மலரும் சூட்டப்பட்டது, தூப தீபமும், தூய நறுமணச் சாந்தும் கொண்ட வாசனை வெள்ளத்தில் அவர் ஆழ்த்தப்பட்டார். ஒப்பு உவமை இல்லாத தனிப்பட்ட பிரஞ்சுக் கவியாகி விளங்கலானர் நமது வால்டையர். சர்வ வல்லமை வாய்ந்த தனி ஆசிரியராய், ஆசிரியர் குழாத்தின் ஆற்றல் மிக்க வேந்தனாய் திகழ்ந்திருந்தார்

கம் வால்டையர். அக்காலத்தில் மூன்றே மூன்று பொருள்கள் தாம் பிரான்சில் அரியனவாயும், பெரியனவாயும் இருந்தன. அவையாவன: மன்னன், கோயில், வால்டையர்.

ஆனல் மன்னன் வால்டையருக்கு விரோதியாயிருந்தான். சமஸ்தானம் அவருடன் ஒரு சம்பந்தமும் வேண்டாமலிருந்தது. மதக் குருக்கள்களோ, ஆத்திரத்தோடும், மௌனத்தோடும், தனது வஞ்சம் தீர்த்துக்கொள்வான் வேண்டி, சமயம் பார்த்துக்கொண்டே வந்தனர். இருந்தாலும், மன்னர் விரோதமும், மதத்தினர் விரோதமும் வால்டையரை ஒன்றும் செய்யமுடியவில்லை. அவர் மீது மக்களுக்கு இருந்த மட்டற்ற அன்பாலும், மரியாதையாலும் அவர்கள் அவரை ''தெய்வமெனவே போற்றிக் கொண்டாடலாயினர்.

அப்போது அவருக்கு வயது எண்பத்து நான்கு. வாழ்க்கைச் சாதனங்களாலும், இன்பப் பொருள்களாலும் இனிது சூழப்பட்டே இருந்துவரலானர். அபார செல்வத்தோடு திகழலானர். உலகத்திலே இருக்கும் ஆசிரியருள் மிகச் செல்வவானகவே இருந்தார். அவர் ஒரு ஆசிரிய அரசன். தனது சிம்மாசனத்தைத் தானே செய்வித்தவர், தனது அதிகாரத்தைத் தானே சம்பாதித்தவர். தனது கடைசிக் காலத்தை அவர் வெற்றியின் போதையிலேயே கடத்தமுடிந்தது. அவர் எங்கும் வணங்கப்பட்டே வந்தார். வயதிலும் அவர் உச்ச நிலையை அடைந்திருந்தார்.

குருக்கள்மாருக்கு நடுக்கம் பிடித்துவிட்டது. கடவுளானவர் எங்கு, தனது பல வேலைத் தொந்தரவில்,

வால்டையருக்கு தண்டனை யளிக்காமல் மறந்துபோய் விடப் போகிறாரோ என்று பயப்படலாயினர்.

1778-வதாண்டு மே மாதக் கடைசியில் வால்டையர் இறக்கும் தறுவாயிலிருக்கிறார் என்னும் வதந்தி இரகசியமாய் உலவியது. மூட நம்பிக்கையும், முரட்டு வைதீகமும் ஆகிய பருந்துகள் தமது இரையைக் கொள்வதற்காக வஞ்சம் என்னும் சுவற்றின் மீது வந்து உட்காரலாயின.

“அவர் இறப்பதற்கு இரண்டு நாட்களுக்கு முன்னதாக வால்டையரின் உறவினன் ஒருவன் செயின்ட் சல்பிஸ் என்பவரையும், ஆபி காட்டியர் என்பவரையும் அவரது படுக்கையறைக்கு அழைத்துவந்தான். அப்போது வால்டையர் கூறியதென்னவென்றால், “ஆ, நல்லது, அவர்களுக்கு எனது நன்றியையும் வந்தனத்தையும் அளியுங்கள்.” ஆபிகாட்டியர் என்பவர் வால்டையரைப் பொருமையோடு இருக்குமாறு சில வார்த்தைகள் புகன்றார். பிறகு செயின்ட் சல்பிஸ் என்பவர் முன்வந்து, தனது வருகையை அறிவித்துப் பின், சற்று உறத்த குரலில், வால்டையரைப் பார்த்து அவர் ஏசுவினுடைய தெய்வீகத் தன்மையை ஒத்துக்கொள்ளுகிறாரா என்று வினவினார். உடனே நோயாளியான வால்டையர் தனது ஒரு கரத்தால் அந்தச் சாமியாரைப் பிடித்து ஒருபுறம் தள்ளிவிட்டு, மற்றொரு புறம் தனது முகத்தைத் திருப்பிக் கொண்டு, “நான் அமைதியாக இறக்கவேண்டும்; தொந்திரவு செய்யாதீர்” என்று கூறினார். இவ்வாறு அவர் செய்யவே அந்தச் சாமியார் தன்னை வால்டையர் தொட்டதால் தீட்டு ஏற்பட்டு விட்டதென்று நினைத்துத்

தனது உடையைத் துடைத்து விட்டுக்கொண்டே, மற்ற சாமியாரோடும் அவ்விடத்தை விட்டகன்றார்.

வேக்னீர் என்பவர் வால்டையர் 1778-வது வருடம் மே மாதம் 30-ந் தேதி இரவு பதினொன்றேகால் மணிக்கு மிகுந்த அமைதியோடும், சாந்தத்தோடும் உயிர் நீத்தார். என அறிவிக்கின்றார். தான் இறக்குந் தருவாயிக்கு இரண்டொரு நிமிடங்களுக்கு முன்னதாக, தனது உண்மை வேலைக்காரனான மோராண்டு என்பவரை அருகில் அழைத்து, அவனது கரத்தைப் பிடித்துவிட்டு, "எனது அருமை மோராண்டே, நான் விடை பெற்றுக் கொள்ளுகின்றேன். இதோ போகின்றேன்" என்று கூறியவண்ணம் இறந்தார் வால்டையர். இவைகளே அவரது இறுதி மொழிகளாகும். பசுமரத்து நிழலும் பச்சைப் புல் தரையும் கொண்ட கரைகளையுடைய கால்வாய் அமைதியின் ஓடி அகண்ட கடலில்ச் சேர்வதைப்போல, வால்டையரின்வாழ்க்கையானது அமைதியோடு சென்று அலைகளற்ற கடலாகிய அமைதி நிலைமையை யடைந்தது.

இவ்வளவு சாதாரணமாகவும், சாவதானமாகவும் இவ்வளவு அழகாகவும், இவ்வளவு அமைதியோடும் இறந்திருந்தும், இவ்வளவு உண்மையானதும், இயற்கையானதுமான வார்த்தைகளை அவர் பேசியிருந்தும், ஏராளமான அபாண்டப் பொய்க் கதைகள் அவற்றைப்பற்றிக் கற்பிக்கப்பட்டுள்ளன. பூச்சிகளையும், புழுக்களையும், அவரது கால் தூசிகளையும் ஒத்த பொய்ப் பிண்டங்களாகிய குருக்கள் அவரைப்பற்றி அளவு கடந்த பொய்க் கதைகளை ஆரம்பித்து விட்டு வைத்துள்ளார்கள்.

உண்மையாகவே ஆராய்வோம். ரோமன் கத்தோலிக்க சாமியார்கள் அனைவரும் சேர்ந்துங்கூட, ப்ரூனோ என்ற, ஒருவர் செய்த அளவுக்கு, மக்களின் அறிவுச் செல்வத்தை வளர்க்க முடிந்ததாக டிடரட் என்பவராவது, வால்டையராவது செய்த அளவுக்கு பிரான்சு தேசத்துச் சாமியார்கள் அனைவரும் சேர்ந்து உலக நாகரீக முன்னேற்றத்திற்கு தொண்டு செய்ததுண்டா? டேவிட் ஹ்யூம் என்பவர் ஒருவர் மக்கள் அறிவை வளர்க்கச் செய்ததைப்போல ஸ்காத்லந்தைச் சேர்ந்த குருக்கள் கூட்டம் அத்தனையும் செய்ய முடிந்ததா? மக்களின் சுதந்திரத்திற்காக தாமஸ் பெயின் என்பவர் ஒருவர் செய்ததைப்போல வாழையடி வாழையாக வந்த குருக்கள் மாரும், சாமியார்களும், போப்புகளும், பூசாரிகளும் செய்ததுண்டா?

மத விரோதிகளே இல்லாமலிருந்தால், உலகம் எவ்வாறு இருந்திருக்கும்?

உலகத்திய மத விரோதிகள் அனைவரும் சிந்தனைக்காரர்களும், சிறந்த வீரர்களும் ஆவார்கள்; அவர்கள் உலகத்தின் உத்தமர்கள். சுதந்தரத்தையும், அன்பையும் நிலை நாட்டிய சுத்த வீரர்கள் அவர்களே. நமது மக்களில் காருண்யம் நிறைந்தவரும், மூக்கால ஞானிகளும் அவரே.

அப்படியிருக்க, அடிமைத் தனத்தைப் பாதுகாத்தவர்களும், பல மனைவி வாழ்க்கையைப் பலமாக ஆதரித்தவர்களும், அன்னையின் முலைப்பால் குடிக்கும் அருங்குழவிகளைக் களவாடுவதை ஆதரிக்கும் முரடர்களும்,

கூலிப்பணம் கொடாமல் வேலையாட்கள் முதுகில் கொடிய சவுக்கால் அடித்து வதைக்கும் கொடும் பாவிகளும் அமைதியோடும் புன்னகை பூக்கவும் உயிர் நீத்து விண்ணவர் உலகத்திற்கு விருந்துண்ணப் போனதாகவும், ஆனல் தமது சகோதிர மக்கள் சுதந்தரத்தோடும், சுகத்தோடும் இருக்கப்பட்ட சுத்த வீரர்களும் தூய மக்களும் தாம் இறக்கும் தருவாயில் தமது மனசாக்ஷியாகிய விட அரவால் வதைக்கப்பட்டார்கள் எனவும், ஏன் கூறப்படவேண்டும்? மற்றும், வீர சிந்தனையாளரும், ஆராய்ச்சியாளரும், உண்மைக்காரரும், தப்பெண்ணங்களைத் தகர்த்தெறிந்தவரும், மனித வர்க்கத்தின் மாபெருந் துணைவரும், சுதந்திரத்தின் வீரரும், அடிமைத்தளை அகற்றும் அறிஞரும், அகத்தை விளக்கும் அன்பரும், ஆகிய இவர்கள் பயத்தோடும் யம தூதர்களின் சித்திரவதையோடும் இறந்ததாகவும், ஆனல், பர்த்தாலம்யூ படு கொலையைச் செய்த பாதகர்களும், நகக்கண்ணில் ஊசி விடும் ராக்ஷசர்களும், இருப்புச் செருப்பும், குட்டை மரமும் கொண்டு இம்சிக்கும் இழியர்களும், மனித உடலைச் சுட்டும், பிளந்தும் கொடுமைப்படுத்தும் கொடியர்களும், மக்களைத் திருடியும், சவுக்கால் அடித்தும், அடிமைப் படுத்தியும் வதைக்கு மாக்களும், மாதாவையும், மாதர்களையும், மடக் குழவிகளையும் விற்றும், விலைக்கு வாங்கியும், வீறிடும்படி அடித்தும் இம்சிக்கும் மிருகங்களும், இருப்புச் சங்கிலியையும் இருண்ட கீழ் அரையையும் உண்டாக்கும் இழிஞர்களும், ஏசுவைக் கொன்றவரும், இறந்தவரைத் தூற்றுபவரும், இருப்பவரைத் திட்டுபவரும் ஆகிய இந்தக் கொடியர்கள் எல்லாம் அமைதியோடும் தூய்மையின் சுவாசத்தோடும், அகக்களிப்போடும் விமோசனம்

அடைந்தார்கள் என்றும் ஏன் கூறுகின்றார்கள்? இவை நம்பத் தகுந்தவையா? ஒருக்காலும் இல்லை.

அக்காலத்தில் தத்துவ சாஸ்திரிகளை பரிசுத்தமான இடுகாடுகளில் புதைப்பதில்லை. அவர்களது கொள்கைகள் ஏனைய பிணங்களைக் கெடுத்துவிடக்கூடும் என்று அஞ்சி, அவரது உடல்களை நெருப்பிலிட்டும் பொசுக்கவோ, அல்லது மிருகங்களுக்கு இரையாகவோ எறிந்துவிடுவது வழக்கம். வால்டையரது பிரேதத்திற்கு இத்தகைய கெடுதல் நேரிடுமென்று அஞ்சி, சில சடங்குகளுக்கு, மனச் சம்மதமில்லாமலே கட்டுப்படவேண்டி வந்தது. அதன்பிறகு பாரிஸுக்கு நூறு மைல்களுக்கப்பாலுள்ள இடுகாட்டில் இவரது உடலை ஒரு நான்கு குதிரைகள் பூட்டப்பட்ட வண்டியில் வைத்து ஒருவருக்கும் தெரியாதபடி கொண்டுபோய் சடங்குகள் செய்து புதைத்துவிட்டனர். இது ஆனவுடன் பிஷப்பு அவரை அங்கு புதைக்கக்கூடாது என ஆக்ஞாபித்தார். ஆனல் காரியம் மிஞ்சிப்போய்விட்டது. ஒன்றும் செய்யமுடியவில்லை.

வால்டையர் இறந்துவிட்டார். இருந்தாலும் உலகம் முழுதும் உயிர் பெற்றெழுந்தது. உலகம் போலியரசரையும, போலிக்குருக்கள்களையும் உதறி எறிந்து உண்மை மன்னரையும், உண்மை மகிபர்களையும் உணரலாயிற்று. ஏழைகள் தமது உயர்வை உணர்ந்து மேல் நோக்கி வரலாயினர். மடமை என்னும் இரவு இருள் நீங்கி அறிவு என்னும் பகல் உலகத்தில் உதயமாகியது. சமத்துவம், சகோதரத்துவம் என்னும் தாகம் மக்களிடம் ஏற்படலாயிற்று.

மதத்துவேசிகளைத் தவிற மற்றக் குற்றவாளிகள் அனைவரும் அமைதியோடுதான் தமது உயிர் நீக்குகின்றார்கள். வழிபறிக் கொள்ளைக்காரன் இறக்கும்போது தனது வாழ்க்கையில் யாதொரு இழிவும் இருப்பதாக ஞாபகப்படுத்தப்படுவதில்லை. இருபுறத்திலும் பாதிரிமார்களை வைத்துக்கொண்டு கொலைஞனுங் கூட மற்ற மக்களிடம் தன்னை சுவர்க்கத்தில் வந்து சந்திக்கும்படி தான் இறப்பதற்கு முன் கூசாமல் பேசுகின்றான். தனது வீட்டை நரகத்தை ஒப்பவைத்திருந்த ஒருவனும் கூட ஏசுநாதரின் தெய்வீகத் தன்மையை மட்டும் சந்தேகிக்காமல் இருந்தால் தான் இறக்கும் தருவாயில் யாதொரு நடுக்கமும் இல்லாமல் இருக்கின்றான். குழந்தைகளையும், மாதர்களையும் குத்தி வெட்டிப்போடும் கொடிய யுத்தங்கள் பல நடத்திய மன்னனுங் கூட சாமியாரைப் போன்றே உயிர் துறக்கின்றான். இது உலகத்தில் நாம் காண்பது.

நம்பிக்கையுள்ள மன்னர்கள் எல்லாம் சுவர்க்கத்தில் இருக்கின்றார்கள். நம்பிக்கையற்ற ஆசிரியர்கள் எல்லாம் நரகத்தில் வதை படுகின்றார்கள். சித்திரவதைக்காரர்களும், மனிதரைச் சிதைத்தவர்களும் தூய நிலத்தில் துஞ்சுகின்றார்கள். கொள்கைக்காகவும், வேதத்திற்காகவும் கோடிக்கணக்கான மக்களைக் கொலை செய்த் கொடிய பாதகர்களின் எண்ணிக்கை ஆற்று மணலினும் பெரிது. அப்படியிருந்தும் அவர்கள் இறக்கும் தருவாயில் பட்ட கஷ்டத்தையும், மனக்கவலையையும் பற்றி எந்தச் சாமியார்கள் வருணித்திருக்கின்றார்கள்? இவர்கள் எல்லாம் நம்பிக்கை கொண்டவர்கள். ஏசுவின்

தெய்வீகத்தில் நம்பிக்கை வைத்திருந்தார்கள். ஆகை யால் கடவுள் அவர்களை ஒன்றும் செய்யவில்லை. ஆனல் தத்துவ சாஸ்திரிகள் தெய்வீக உண்மையைச் சந்தேகித் தார்கள். அல்லது தப்பான கடவுளைக் கும்பிட்டார்கள். அல்லது சரியான கடவுளைத் தப்பான பேர் சொல்லிக் கூப்பிட்டார்கள். ஆதலால் கடவுள் சீறி அவர்கள்மீது பாய்ந்து அவர்களது சதையைப் பிய்த்தெரிந்துவிட்ட தாம். இதுபோன்ற நம்பிக்கை இருந்து வருகின்றது.

———)o(———

## எட்டாம் அத்தியாயம்.

உலகத்தின் இலக்கியங்களில் ஒரு இடத்திலும், கொலைக்கு உயர்த்திய கொடுங்கரம் குன்றி வீழ்ந்தொடிந் ததாகவோ, அல்லது ஒன்றுமறியாக் குழவிகள் உயிர் தப்பி பிழைத்ததாகவோ எழுதப்பட்டிலது. இந்த நிமி டத்தில் கூட உலகத்தில் ஏராளமான கொடூரச் செயல் கள் நடந்துகொண்டே இருக்கின்றன. மனிதனைப் பிடித்து வதை செய்ய மனிதர்களே ஒளிந்துகொண்டு சமயம் பார்த்து வருகின்றார்கள். மனைவிமார்கள் சவுக் கால் அடிக்கப்பட்டும், பைத்தியம் பிடித்தவர்களாக்கப் பட்டும் சாகடிக்கப்படுகின்றார்கள். பைங்குழவிகள், கண் ணீர் ததும்பக் கறைந்துருகித் தம் கரங்களை ஏந்திப் பா வியராகிய தம் தாய் தந்தையரை நோக்கித் தம்மை வதை க்காவண்ணம் வாதாடுகின்றார்கள். இனிய, இளங்கன்னி

கள் இரக்கமற்ற கொடியர்களால் கற்பழிக்கப்பட்டு வரு கின்றார்கள். ஆனால் கடவுளுக்கு இத்தகைய கொடுமை களைத் தடுக்கவும், குற்றம் செய்வோரைத் தண்டிக்கவும் நேரம் கிடையாது. அவருடைய வேலை என்னவென்றால், யார் யார் கடவுளைத் தூஷிக்கிறான், பாதிரிகளை ஏளனம் செய்கிறான், தெய்வீக நூல்களைப் புரட்டிப்பார்த்து குற்ற ங்காண்கிறான், என்று கவனிப்பதும், கல்லூரிகளில் மோ ஸசென்பவருடைய பூலோக சாஸ்திரத்தையும், யோகுவா னென்பருடைய வான நூலையும் சந்தேகிக்கும் ஆசிரியர் கள் யார் என்பதைக் கவனிப்பதுமே ஆகும், சாமி மீது ஆணையிடுவதைத் தவிர வேறு எக்குற்றம் செய்தாலும் குற்றமில்லை. ஒருவன் திருடினாலும் சரி; தண்டிக்க மாட்டார். கடவுள் பேரைக் கறைந்துருகிக் கூவினும் ஆயிரக்கணக்கான மக்கள் படுகொலை செய்யப்பட்டுள்ளா ர்கள். லக்ஷக்கணக்கான ஜனங்கள் தமது உறைவிடத் தினின்றும் ஆடுமாடுகளைப்போல் ஓட்டிச் செல்லப்பட்டு உதைக்கப்பட்டு அடிமைகளாக்கப்பட்டு வருகின்றனர். ஆனால் இத்தகைய படுகொலைகளில் ஈடுபட்ட பாதகர்களை பரம பிதாவாகிய கடவுளின் வெகுளி அணுகுவதும் கிடையாது!

அடிக்கடி, உள்ளதை உரைக்கும் உத்தம புருடர்கள் உலகத்தில் தோன்றி வருகிறார்கள். அவர்கள் தங்கள் காலத்திய மூடப் பழக்க வழக்கங்களை முழுதும் கண் டித்து வருகிறார்கள். பாதிரிகளும், துறவிகளும் மக் களது பணத்தைக் கொள்ளையடிப்பதைக் கண்டு இவர் கள் பரிதாபப்படுவதுண்டு. இவர்கள் தமது எண்ணத் தை தைரியமாக வெளியிடுவார்கள். ஆனால் இவர்கள்

விசாரிக்கப்பட்டு, வதைக்கப்பட்டு, கொலை செய்யப்பட்டும் வந்தனர். சிலர் இத்தகைய கொடும் பகைவர் கோபத்தினின்றும் தப்பியோடி இயற்கையாகவே தம் இல்லத்தில் இறந்தனர். அப்படியிருந்தும் மதக் குருக்கள், இவர்கள் மன அமைதியோடு உயிர் நீத்ததாக ஒப்புக்கொள்வதில்லை. ஏனெனில் அவ்வாறு ஒப்புக்கொண்டால் மதம் மக்களுக்குத் தம் இறுதிக் காலத்தில் இன்றியமையாதது அன்று என்று தெரிந்துவிடுமாம். இவர்கள் பொது மக்களுக்குப் போதித்து வருவது என்னவென்ருல், பைபிளை மறுத்தவனும், சிலுவையை முத்தம் கொடுக்கமுடியாது என்றவனும், மனித வர்க்கம் கிறிஸ்த்துவினும் பெரிது என்று மன்ருடிக் கூறினவனும் அமைதியோடு இறக்கமுடியாது; ஆனல், உண்மைவான் ஒருவனது காதில் உருக்கிய நாராசத்தை ஊற்றிய பிர்க்கிவிமேடா என்னும் கொடும் பாதகனும், சர்விடஸ் என்பவரை சாம்பலாகப் பொசுக்கிய கால்வின் என்னும் கடையனும், ஒரு மகனைக் கொண்டு மற்ரெரு புதல்வனைக் கொல்வித்த அரக்கன் ஒத்த டேவிட் என்னும் மன்னனும் வெகு அமைதியோடும், இன்பத்தோடும் உயிர் நீத்தார்கள் என்பதேயாகும்.

தங்களால் வெற்றி பெற வேகவைத்துக் கொலை செய்யாமல் விடப்பட்ட, மதத்துவேசிகள் தமது கடைசி காலத்தில் நரகவேதனைப் பட்டார்கள் எனினும் கதையை, மதக் குருக்கள் சதாகாலமும் பரப்பியே வந்துள்ளார்கள். ஒவ்வொரு கிறிஸ்தவனும் இதை நம்பித்தான் வருகிருன். தம்முள் வேறு விஷயங்களில் மாறுபடினும் இதில் மட்டும் ஒருமித்தும் புராட்டஸ்டெண்டு குருக்

களும், கத்தோலிக்கர்களும் இத்தகைய பெரும் பொய்க் கதையை கட்டுப்பாடாக உலகில் பரவ வைத்து வந்துள்ளார்கள்.

ஆனல் உண்மையில் நமது வீரர் வால்டையர் செய்தது என்னவென்ருல்: வேதத்தை ஆராய்ந்தார், அறிவின் சுதந்திரத்தை வேண்டினர், மூளையை மூடியிருந்த மூடக் கொள்கை மாசுகளை பிடுங்கி வீசி எறிந்தார், ஏழைகளைப் பாதுகாத்தார், மக்களை வதைக்கும் மடையர்கள்மீது வெகுண்டார், பகுத்தறிவைப் பலப்படுத்தினர், சர்வ லோக சமாதான நிலைமைக்குப் பாடுபட்டார், கஷ்டப்படுபவர்க்கு உதவியளித்தார். எல்லா மதங்களும் ஒரே மூல காரணத்தை உடையது என்பதை விளக்கினர். அவைகள் எல்லாம் எந்த மதத்துக்கும், ஒரேவிதமான அபூர்வச் செயல்கள், அற்புதங்கள், பொய்கள், கோயில்கள் குளங்கள், அனுஷ்டானங்கள், கொலைகள், குற்றங்கள் என்று காட்டினர். மதத்தால் மக்களுள் பகைமையும், தத்துவ சாஸ்திரத்தால் நேசமும் விளைகின்றன என்று விளக்கினர். மக்கள் உரிமைகளே கடவுள் உரிமையினும் மிகப் பெரிது என்று நிரூபித்தார்.

இவைகள் தாம் அவரது குற்றங்களாம். இத்தகைய மனிதனைக் கடவுள் எப்படி நிம்மதியாய் உயிர் நீக்க விட்டு வைப்பார்? இத்தகையை கடவுளின் பகைவன், அஞ்சி, அரற்றி, அழுது, பயந்து நடுநடுங்கி இறந்ததாக உண்டாகவில்லை என்ருல் இன்னும் எண்ணிறந்த மக்கள் அவரது உதாரணத்தைப் பின்பற்றி விடமாட்டார்களா? அப்படியாயின் எத்தகைய ஆபத்து ஆகும். அது பல நூற்ருண்டுகளாய், பல்லாயிர வருடங்களாய்

கடவுளில் நம்பிக்கையற்றவர்கள் இறக்குந் தருவாயில் கஷ்டமும், நரகவேதனையும் அனுபவிக்கின்றனர். என்ற கதையை மதக்குருக்கள் பரப்பி வந்துள்ளனர். மனிதனுக்கு ஒருவன் கொண்டுள்ள பகைமையிலும் கடவுளுக்கு அவன் கொண்டுள்ள பகைமை மிகக்கொடிது என்று கூறி வந்துள்ளார்கள். இத்தகையவர்கள் நரகத்தில் அனுபவிப்பதாகப் பலவிதமான கொடூர தண்டனைகளை வருணிக்கிறார்கள். அச்சமயம் 'கருணை' வடிவாகிய இந்தப் பாதிரிகள் வெகு மகிழ்ச்சியடைகின்றார்கள். இறப்பில்லா அறவுகளால் கடிக்கப்பட்டும், எரி மலைகளால் எரிக்கப்பட்டும், துயரக் கடலில் தள்ளப்பட்டும் இந்த மதத் துவேஷிகளின் ஆன்மாக்கள் வதைபடுவதை வருணித்து ஆனந்தமடைகிறார்கள் இந்தப் பாதிரிகள.

நாநூறு வருடங்களாக பாஸ்டைல் எனனும் சிறைச்சாலை கொடுங்கோன்மையின் வெளிச்சின்னமாக இருந்து வந்தது. உத்தமர்களில் பலர் அதன் உள்ளே உயிர் துறந்துள்ளார்கள். மன்னர்களும், மதக் குருக்களும் அந்த ஆயுதத்தை உபயோகித்து வந்துள்ளனர். அந்தக் கட்டிடத்தின் பாழும் இருட்டறைகளும், பாதாளக் குழிகளும், நீண்ட கோபுரமும், இரகசிய இடங்களுமே கடவுள் இல்லையென்பதற்குச் சான்றாய் இருந்தன.

1789-வது வருடம், ஜூலை மாதம் 14-ந் தேதி, நீண்ட நாள் கஷ்டத்தால் நிலை தடுமாறிய மக்கள் அந்த பாஸ்டைல் என்ற கட்டிடத்தைத் தாக்கினர் அப்போது அவர்கள் கூவிய கூச்சல் "வாழ்க வால்டையர்" என்பதாகும். 1791-வது வருடம் வால்டையரின் சாம்பலை பானந்தியன் என்ற இடத்தில் சேமிக்க அனுமதியளிக்

கப்பட்டது. பாரிஸ் நகரத்துக்கு நூற்றுப்பத்து மைல்களுக்கப்பால் இரகசியமாய் புதைக்கப்பட்ட அவரது எலும்பைப் பிரான்சு தேச மக்கள் அனைவரும் இப்போது அவ்வளவு தூரமும் ஒரு பெரும் ஊர்வலத்தோடு எடுத்து வந்து உத்ஸவம் கொண்டாடினர். வழியிலுள்ள கிராமங்கள் தோறும் தோரணங்களும், கொடிகளும், துலங்கும் குதூகலமும் கூடி பிரான்ஸின் பிரதம தத்துவ சாஸ்திரியை, ஏழை நேசனை, இணையற்ற வீரனைக் கொண்டாடிப் பெருமை படுத்தினர். வழியில் பாஸ்டைலின் இடிந்த கட்டிடத்திலும், சிதைந்த சிகரத்திலும் வால்டையரின் சாம்பல் ஒரு இரவு முழுதும் வைக்கப்பட்டிருந்தது.

கடவுள் 'வஞ்சம் தீர்ப்பார்' என்று ஒரு பாதிரி கூறினார். அவ்வார்த்தைகளை ஆயிரம் லக்ஷக்கணக்கான மக்கள் செவியுற்றனர். அவைகள் உண்மையே யாயின. சமாது காலியாயிற்று; வால்டையரின் சாம்பல் கொண்டு செல்லப்பட்டது. ஆனால் வால்டையரின் பேர் மணம் வானளாவி உலகம் முழுதும் பரவியது மனிதன் வெற்றி பெற்றான்.

பதினெட்டாம் நூற்றாண்டில் மதக்குருக்களுள் எவனும் வால்டையருக்குச் சமமானவன் இருந்ததுண்டா? இவரைத் தவிர வேறு எந்தக் குருக்கள், எந்தப் பெரிய மனிதன் ஏழையைக் காத்தான், உரிமைக்குப் பாடுபட்டான், உண்மையை உரைத்தான், குற்றங்களைக் கடிந்தான், குறைகளைப் போக்கினான்? வால்டையரது சமாதைத் தவிர வேறு எந்தப் பாதிரியின் சமாதியாவது எவனும் ஒரு கண்ணீர்த் துளியையோ, கடிய மலரை

யோ இடுவதற்கு முன் வருவானா? மற்றொரு உலகமும், நியாய விசாரணையும் இருக்குமேயானால், ஒரு உண்மைக் கடவுளும், இவ்வுலகில் சித்திரவதையைப் போக்கப் பாடு பட்ட உத்தமரைச் சித்திரவதைக்கு ஆளாக்கவேமாட்டார். இவ்வுலகத்திய மக்களின் அடிமைத் தளையை அறவே களைந்த அருந் தொண்டராகிய வால்டையருக்கு சிறைத் தண்டனை மேலுகத்தில் என்பது சிந்திக்கவும் தகுந்ததன்று.

'ஓடியஸ்' என்னும் நாடகத்தைப் பதினெட்டாம் வயதிலும் 'ஜரீன்' என்பதை எண்பத்தி மூன்றாவது வயதிலும் எழுதி அதற்கு மத்தியிலுள்ள வருடங்களில் ஆயிர வாழ்க்கையின் அற்புதச் செயல்களை ஆற்றிய அரும் பெரும் வீரர் நம் வால்டையர். ஆல்ப்பஸ் பருவதத்தின் அடிவாரத்திலுள்ள தனது அரியாசனத்திலிருந்து ஐரோப்பாவிலுள்ள கொடும் பாதகர்கள் மீது தனது விரலைச் சுட்டிக் காட்டிவந்தார் அம் மன்னன். ஐம்பது நீண்ட ஆண்டுகளாக வால்டையராகிய வள்ளல், தூக்கு மரத்தின் இடையிலும், 'தூப' கோயில், மன்னர் மத்தியிலும், கறைக் கோவில்கள் வழியிலும், கரிய இருண்ட அறைகளிலும் கஷ்டப்பட்டும், தனது வீரம் பொருந்திய கரங்களில், உலகத்துக்கெல்லாம் ஒளி பரப்பி உண்மையை நனிவிளக்கும் பகுத்தறிவு என்னும் தீப் பந்தத்தை உயரப்பிடித்து நடந்து சென்றார்.

வாழ்க வால்டையர்; வாழ்க 'பகுத்தறிவு!'

முற்றிற்று.

குறிப்பு:— இந்நூல், இங்கர்ஸால் அவர்களால், வால்டையரின் ஆண்டுவிளாவின் போது ஆற்றிய அரிய பிரசங்கத்தின் மொழி பெயர்ப்பாகும்.

# பகுத்தறிவு நூற்பதிப்புக்கழக வெளியீடுகள்.

---

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | பெண் ஏன் அடிமையானாள்? (ஈ. வெ. ரா.) | 0 | 5 | 0 |
| 2. | முன்னேற்றத்திற்கு மதம் முட்டுக்கட்டை | 0 | 5 | 0 |
| 3. | கடவுள். | 0 | 5 | 0 |
| 4. | மதம் மக்களுக்குச் செய்த நன்மை என்ன? | 0 | 3 | 0 |
| 5. | பாதிரியும், பெண்களும், பாவமன்னிப்பும் (இரண்டாம் பாகம் அச்சில்) | 0 | 3 | 0 |
| 6. | பிரகிருதிவாதம் (ஈ. வெ. ரா.) | 0 | 3 | 0 |
| 7. | மதமும், விஞ்ஞான சாஸ்திரமும் | 0 | 3 | 0 |
| 8. | பிரபஞ்ச உற்பத்தி | 0 | 3 | 0 |
| 9. | நான் ஏன் கிறிஸ்தவனல்ல? | 0 | 3 | 0 |
| 10. | நான் சம்சயவாதி ஆனதேன்? | 0 | 3 | 0 |
| 11. | மதம் என்றால் என்ன? | 0 | 2 | 0 |
| 12. | குடி அரசுக் கலம்பகம் (ஈ. வெ. ரா.) | 0 | 6 | 0 |
| 13. | மெய்ஞ்ஞான முறையும், மூடநம்பிக்கையும் | 0 | 6 | 0 |
| | ,, (2-ம் பாகம்) | 0 | 5 | 0 |
| 14. | பாதிரிகளின் பிரமச்சரிய லட்சணம் | 0 | 4 | 0 |
| 15. | மரணத்திற்குப்பின் வாழ்க்கை உண்டா? | 0 | 4 | 0 |

கிடைக்குமிடம்:—

பகுத்தறிவு நூற்பதிப்புக்கழகம் ஈரோடு

# குடி அரசு பதிப்பக வெளியீடுகள்.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | இந்தியாவின் குறைபாடுகள் | 0 | 8 | 0 |
| 2. | லெனினும், மதமும் | 0 | 4 | 0 |
| 3. | பொதுவுடமைத் தத்துவங்கள் | 0 | 3 | 0 |
| 4. | கடவுளும், பிரபஞ்சமும் | 0 | 4 | 0 |
| 5. | கைவல்யம் அல்லது கலைக்கியானம் | 0 | 8 | 0 |
| | (இது சுவாமி கைவல்யம் அவர்களால் எழுதப்பட்டது) | | | |
| 6. | இராமாயண ஆராய்ச்சி பாலகாண்டம் | 0 | 4 | 0 |
| 7. | ,, அயோத்தியாகாண்டம் | 0 | 8 | 0 |
| 8. | ஞானசூரியன் | 0 | 4 | 0 |
| 9. | தர்ம பரீக்ஷை அல்லது புராண ஆபாசம் | 0 | 3 | 0 |
| 10. | மேயோ கூற்று மெய்யா? பொய்யா? | 0 | 3 | 0 |
| 11. | பங்கஜம் அல்லது பார்ப்பனக்கொடுமை | 0 | 4 | 0 |
| 12. | ஈ.வெ.ரா. சீர்திருத்தமகாநாட்டு உபன்யாசம் | 0 | 2 | 0 |
| 13. | அகத்தியர் ஆராய்ச்சி | 0 | 2 | 0 |
| 14. | இராமலிங்க சுவாமிகள் பாடல் திரட்டு | 0 | 2 | 0 |
| 15. | சுயமரியாதைப்பாடல் | 0 | 2 | 0 |
| 16. | கதர் மூட நம்பிக்கை (இங்கிலீஷ்) | 0 | 2 | 0 |
| 17. | சுயமரியாதைத் தாலாட்டு | 0 | 2 | 0 |
| 18. | பர்னார்ட்ஷா உபந்யாசம் | 0 | 1 | 0 |
| 19. | சோஷியலிசம் | 0 | 2 | 0 |
| 20. | போல்ஷ்விக் முறை | 0 | 1 | 0 |
| 21. | ஈ. வெ. ரா. இலங்கை உபந்யாசம் | 0 | 0 | 9 |
| 22. | கத்தோலிக்கர் வீண் கூச்சல் | 0 | 0 | 6 |
| 23. | சமதர்ம உபந்யாசம் | 0 | 0 | 6 |
| 24. | சோதிடப்புரட்டு | 0 | 2 | 0 |
| 25. | மனுநீதி விளக்கம் | 0 | 2 | 0 |

விலாசம்:— மானேஜர்,

குடி அரசு பதிப்பகம், ஈரோடு.